உ

# பாவை மலர்.

1970—71



திருப்பாவை—திருவெம்பாவை

மத்தியக்குழு,

19, பெரிய கடைத்தெரு, மாயூரம்.

# நன்றி அறிவிப்பு.

1970—1971-ம் ஆண்டில் நடைபெற்ற பாவை மகாநாடுகள், பரிசளிப்பு விழாக்கள் இம்மலரில் இடம் பெறுகின்றன. இந்த தொகுப்பை வெளியிடுவதில் பெருமகிழ்ச்சி கொள்கிறோம். பிழைகள் நேர்ந்திருக்கக் கூடும். அதற்கு நேயர்கள் எங்களை மன்னிப்பார்களாக!

இத் தெய்வீகப் பணியின் வளர்ச்சிக்குக் காரணம் தமிழக திருமடங்கள், தமிழ்நாடு அரசாங்க அறநிலயத் துறை இலாகா அதிகாரிகள், தேவாலய தர்ம கர்த்தாக்கள், தேவஸ்தான நிர்வாக அதிகாரிகள், ராமனுதபுரம், சிவகங்கை ஸமஸ்தானங்கள், வார வழிபாடு, ஆஸ்திக சங்கங்கள், பள்ளி நிர்வாகிகள், ஆசிரியர்கள், பேரறிஞர்கள், பத்திரிகைகள், சென்னை, திருச்சி வானெலி நிலைய அதிகாரிகள் முதலானவர்களின் ஊக்கமும், உற்சாக முமேயாகும். இவர்களின் சிரத்தை பெருக இறைவன் அருள் புரிவாராக!

இந்த மார்கழியில் நாடெங்கிலும் பாவைப் பாசுரங்களின் ஒலி முழங்குகின்றன. இந்த மங்கள ஒலி நமது தேசத்தில் ஏற்பட்டுள்ள இன்னல்களை நீக்கி சுபிக்ஷத்தை அளிக்கட்டும்! மற்றும் அகில உலகிலுள்ளோர் இன்புற்றுவாழ அருள் புரியட்டும்.

# திருப்பாவை-திருவெம்பாவை மத்தியக் குழு,

## 19, பெரிய கடைத்தெரு,

## மாயூரம்.

### திருப்பாவை — திருவெம்பாவை மகாநாடுகள் நடத்தும் விழாக் குழுவினர்களுக்கு வேண்டுகோள்.

திருப்பாவை—திருவெம்பாவை முதலிய தெய்வீகப் பாக்களை நம் நாட்டுச் சிறுவர்கள் பயின்று, அவர்கள் ஆயுள் காலத்தில் இறைவனை நினைத்து துதிசெய்ய வேண்டிய தொண்டை நாம் எல்லோரும் இன்றே துவக்க வேண்டுமென்று **ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் அவர்களின்** அபிப்பிராயம்.

திருப்பாவை-திருவெம்பாவைப் பாசுரங்களைத் தங்கள் ஊரில் உள்ள எல்லா ஆரம்பப் பள்ளிக்கூட ஐந்தாம் வகுப்புப் படிக்கும் குழந்தைகளுக்கு மனப்பாடம் செய்விக்கும் பணியில் ஈடுபடுத்த வேண்டுகிறோம்.

மார்கழிமீ முதல் தேதிக்குள் குழந்தைகள் மனப்பாடம் செய்து மார்கழிமீ 30 நாட்களும் விடியற்காலையில் இப்பாசுரங்களைப் பாடிக் கொண்டு அருகாமையில் உள்ள ஆலயங்களின் வெளி வீதியை வலம் வந்து கோபுர வாயிலில் நமஸ்கரித்துவிட்டு வரும்படித் தாங்கள் முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டுகிறோம்,

திருப்பாவை 30 பாசுரங்கள், திருவெம்பாவை 20 பாசுரங்கள் முழுவதையுமோ அல்லது திருப்பாவையை மட்டுமோ அல்லது திருவெம்பாவையை மட்டுமோ பிழையின்றி மனப்பாடம் செய்த குழந்தைகளின் பெயர்களை தை மாதம் முதல் வாரத்திற்குள் எங்களுக்குத் தெரிவிக்க வேண்டுகிறோம்.

போட்டிப் பரீக்ஷையில் தேரியவர்களுக்குத் தை மாதம் 15-ந் தேதிக்குள் பரிசுகள் வழங்க உள்ளூர் அன்பர்களைக் கொண்டு ஒரு பரிசளிப்பு விழா ஏற்பாடு செய்து பரிசுகள் வழங்க வேண்டுகிறோம்.

குழந்தைகள்

# மார்கழி மாதத்தில் என்ன செய்யவேண்டும்?

அருமை குழந்தைகளே!

1 மார்கழி மாதம் பிறக்குமுன் திருப்பாவை—திருவெம்பாவை இவைகளை மனப்பாடம் செய்யுங்கள். மார்கழி 30 நாளும் காலையில் நீராடி, ஆண்டவனை நினைத்து பாடல்களை சொல்லிக்கொண்டு ஊர் வலம் வாருங்கள்.

2 மார்கழி முதல் வாரத்தில் போட்டிப் பரீக்ஷைகளும் மகாநாடுகளும் ஆங்காங்கு நடக்கும். உங்களில் ஐந்தாவது வகுப்பில் படிக்கும் குழந்தைகளில் திருவெம்பாவை 20 பாடல்களையோ அல்லது திருப்பாவை 30 பாடல்களையோ தெளிவாகவும், அழகாகவும் பாடித் தேரும் குழந்தைக்கெல்லாம் அம்பிகையின் வெள்ளி முத்திரை இடப்பட்ட மெடல்கள் இனமாகக் கொடுக்கப்படும்.

3 குழந்தைகளே, இப்பொழுதே மனப்பாடம் செய்யஆரம்பித்தால்தான் மார்கழி மாதம் ஆரம்பத்திலேயே "நெட்டுரு" ஆகும். மார்கழி நீராடி அம்பிகையின் ரக்ஷையைப் பெறலாம்.

4 மார்கழிக்குள் மனப்பாடம் செய்யுங்கள், மார்கழிநீராடுங்கள். ஊர்வலம் வாருங்கள். தூங்கும் குழந்தைகளையும், பெரியவர்களையும் பாட்டுப்பாடி எழுப்புங்கள். ஸ்ரீ ஆசார்யஸ்வாமிகள் அவாவின்படி அனுப்பும் அம்பிகையின் ரக்ஷையை அடையுங்கள். ஆயுள் பூர்ணமாக ஆனந்தமாக வாழுங்கள்.



# ஆலய நிர்வாகிகளுக்கு.

மார்கழி மாதத்தில் திருப்பாவை—திருவெம்பாவை பாசுரங்களை பாராயணம் செய்யும்படி குழந்தைகளுக்கு இப்பாசுரங்களை மனப்பாடம் செய்விக்கும் தெய்வீகப் பணியில் எல்லோரும் இப்பொழுதிலிருந்தே ஈடுபட வேணுமாய் பிரார்த்தித்துக்கொள்கிறோம்.

தங்களுக்கு சுற்றியுள்ள பள்ளிக்கூடத்தில் வாசிக்கும் ஐந்தாவது வகுப்பு குழந்தைகளை அணுகி அவர்களில் போட்டிப் பரீக்ஷையில் கலந்து கொள்ள ஆர்வமுள்ள குழந்தைகளுக்கு இஷ்ட பாடமான பாவைப் பாடல்களை சொல்லிக் கொடுக்க ஏற்பாடு செய்ய வேண்டுகிறோம்.

அவர்களின் எண்ணிக்கைக்கு வேண்டிய புஸ்தகங்களை இக் குழுவுக்கு எழுதி புஸ்தகங்களை பெற்றுக்கொள்ள வேண்டுகிறோம்.

மார்கழி மாதத்தில் பாவை பாசுரங்களை பிழையின்றி மனப் பாடம் செய்த குழந்தைகளுக்கு போட்டி பரீட்சை வைத்து தேறியவர் களுக்கு பரிசு வழங்குவதற்கும் ஏற்பாடு செய்ய முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டுகிறோம்.

மார்கழி மாதம் விடியற்காலையில் சிவாலயங்களில் திருவெம் பாவை பாசுரகளை ஓதுவார்களைக் கொண்டு ஒலிபெருக்கி மூலம் பாராயணம் செய்யவும், விஷ்ணு ஆலயங்களில் தேர்ச்சிப்பெற்றவர்களைக் கொண்டு திருப்பாவை பாசுரங்களை ஒலிபெருக்கி மூலம் பாராயணம் செய்யவும் ஏற்பாடு செய்ய வேண்டுகிறோம்.

திருப்பாவை—திருவெம்பாவை விழாக்கள், ஆலயத்தில் மாதந் தோறும் நடைபெறும் உற்சவங்களைப்போன்று, மதச் சார்புள்ள விழாக் களாக இருப்பதால் இவைகளை மாநாடுகள் என்று அழைப்பதைவிட, விழாக்கள் என்று அழைப்பதே பொருத்தமானது ஆகும். ஆதலால் ஆலய நிர்வாகிகள் அனைவரும் பாவை விழா சம்பந்தப்பட்ட விளம்பரங் களில் "திருப்பாவை—திருவெம்பாவை விழா" என்றே விளம்பரம் செய் யும்படி கேட்டுக்கொள்ளப் படுகின்றனர்.

வரும் மார்கழி மாதத்தில் குழந்தைகளை முன்னிட்டு
நாம் செய்யவேண்டிய கடமைகள் சிலவற்றை

**ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகள் அவர்கள்**

## தெரிவித்துள்ளார்கள்.

1 மார்கழி மாதத்தில் திருப்பாவை — திருவெம்பாவைப் பாசுரங்களைப் பாராயணம் செய்துகொண்டு வீதி வலம் வரும்படியாக குழந்தைகளுக்கு இப் பாசுரங்களை மனப்பாடம் செய்விக்கும் தொண்டில் எல்லோரும் ஈடுபடவேண்டும். அவரவர்களுக்குப் பக்கத்தில் உள்ள பள்ளிக்கூடங்களில் வாசிக்கும் 5-வதுவகுப்பு குழந்தைகளை அணுகி அவர்களில் பாவைப் போட்டி பரீட்சையில் கலந்துகொள்ள ஆர்வமுள்ள குழந்தைகளுக்குப் புத்தகங்கள் வழங்கி இஷ்டமான பாவைப் பாடல்களை சொல்லிக்கொடுக்க ஏற்பாடுகள் செய்யவேண்டும். தேவையான புத்தகங்களுக்கு இக்குழுவிற்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

2 மார்கழி மாதம் விடியற்காலையில் சிவாலயங்களில் திருவெம்பாவை பாசுரங்களை ஒதுவார்களைக்கொண்டு ஒலிபெருக்கி மூலம் பாராயணம் செய்யவும் விஷ்ணு ஆலயங்களில் தேர்ச்சிப்பெற்றவர்களைக்கொண்டு திருப்பாவை பாசுரங்களை ஒலிபெருக்கி மூலம் பாராயணம் செய்யவும் ஏற்பாடு செய்ய வேண்டும்.

3 மகாநாட்டின் ஆரம்பத்தில் நடைபெற்றுவரும் ஊர்வலத்தில் படங்களையோ, மூர்த்திகளையோ எடுத்துச்செல்லாமல் இவ்விழா சம்மந்தமான ஏட்டுச் சுவடிகளையே அலங்கரித்து வைத்து எடுத்துச்செல்வது உசிதமாகத் தோன்றுகிறது.

4 மார்கழி மாதத்தில் திருக்கோயில்களில் பாவை மகாநாடு அன்று காலையில் ஊர்வலம் முடிந்தவுடன் கோபுரங்கள், மதில்கள், சுற்றுப் பிராகாரம் இவைகளில் இருக்கும் செடிகள், புல்கள் இவைகளைத் தொண்டர்களின் ஒத்துழைப்பின் பேரில் எடுத்தும், திருக்கோயில்களில் உள்ள விளக்குகள் பூஜைக்கு உரிய பாத்திரங்கள் இவைகளை நன்ருகச் சுத்தம் செய்தும் வைக்க ஏற்பாடுகள் செய்து உடன் பக்கத்து வீதியில் உள்ள வீடுகளில் பிடி அரிசி கலயம் வைத்து அரிசி வசூல்செய்து திருக்கோயில் நைவேதனத்திற்கு ஏற்பாடுகளும் செய்தல் வேண்டும்.

மாணிக்கவாசகரின் திருவெம்பாவையும், ஆண்டாளின் திருப்பாவையும் மார்கழி நீராடலையே சிறப்பிக்கின்றன. குழந்தைகளின் மனதில் தீயஎண்ணங்கள் புகுவதற்கு முன் குற்றமற்ற தெய்வீக நூல்களை அவர்கள் நாவில் ஊர வைப்பதே நாம் செய்யவேண்டிய முதற்பணி.

# 1970—1971-ம் வருஷத்தில் நடைபெற்ற பாவை மகாநாடுகள், பரிசளிப்பு விழாக்களின் விபரங்கள்.

1 சென்னை ; 3—1—1971 ஞாயிற்றுக்கிழமை கிருஷ்ணப்பநாயக்கன் அக்ர ஹாரத்தில் உள்ள ஸ்ரீ சிருங்கேரி ஸ்ரீ சங்கரமடத்தில் ஸ்ரீ காஞ்சி ஸ்ரீமான் ஸ்ரீதர தாதாசாரி யார் ஸ்வாமிகள் அவர்கள் திருமுன்னிலையில் திருப்பாவை வித்வத் ஸதஸ் ஸ்ரீ ஆண்டாள் ஸத சங்கம் சார்பில் மிகவும் நல்லமுறையில் நடைபெற்றது. அவ்வமயம் திரு D. M. அகர் வாலா அவர்கள் வரவேற்புரை வழங்கினர். ஸ்ரீ காஞ்சி பிரதிவாதி பயங்கரம் ஸ்ரீ உ. வே. அண்ணங்கராச்சாரியார் ஸ்வாமிகள் அவர்கள் ஸதஸில் கலந்து கொண்டு உரையாற்றினர் கள். ஸ்ரீமடம் தர்மாதிகாரி அவர்கள் பிரம்மஸ்ரீ சித்தாந்தி சுப்ரமண்ய சாஸ்த்திரிகள் அவர் கள் அருமையாக உரையாற்றினர்கள். திரு P. G. வீரராகவதாஸன் அவர்கள் வந்தனே பசாரத்துடன் விழா இனிது முடிவுற்றது. மேலும் கமலாபுரம் உ. வே. சந்தானகோபாலா-சாரியார் ஸ்வாமிகள், ஸ்ரீ உ. வே. அக்னிஹோத்ரம் ராமானுஜ தாதாசாரியார் ஸ்வாமிகள், ஸ்ரீ உ. வே. காட்டம்பட்டி ஸ்ரீ P. V. ஸ்ரீனிவாஸராகவாசாரியார் ஸ்வாமிகள், ஸ்ரீ உ. வே. மன்னார்குடி K. வரதாசாரியார் ஸ்வாமிகள், ஸ்ரீ உ. வே. திருக்களம் நரசிம்மாசாரியார் ஸ்வாமி கள், ஸ்ரீ உ. வே. ஸ்ரீ பெரும்புதூர் ஆசூரி நரசிம்ஹாசாரியார் ஸ்வாமிகள் அவர்கள் ஆகிய வித்வான்கள் ஸதஸில் கலந்து கொண்டனர். ஸ்ரீ D. M. அகர்வாலா, திரு P. G. வீரராகவ தாஸன் அவர்கள் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து கொடுத்து விழாவை நல்லமுறையில் நடத்தி வைத்தார்கள்.

2 சென்னை : 5—1—1971 செவ்வாய்க்கிழமையன்று ஜெனரல் முத்தையா முதலி தெருவில உள்ள பைராகி மடம் ஸ்ரீ வெங்கடேசப்பெருமாள் தேவஸ்தானத்தில் திருப்பாவை—



சென்னை

ஸ்ரீ வெங்கடேசப்பெருமாள் கோயிலில்

பாவை விழா சமயம்

ஸ்ரீ ஆண்டாள் ஊர்வலம்



சென்னை

ஸ்ரீ வெங்கடேசப்பெருமாள் கோயில்

பாவை விழாவில் துணை ஆணையர்

சொற்பொழிவாற்றுகிறார்.



சென்னை

ஸ்ரீ வெங்கடேசப்பெருமாள் கோயில்

விழா நிகழ்ச்சி.

திருவெம்பாவை மகாநாடு மிக நல்லமுறையில் நடைபெற்றது. அது சமயம் சென்னை, அறநிலைய பாதுகாப்புதுறை டெபுடி கமிஷனர் திரு K. ராஜா B. A., B. L., அவர்கள் விழாவிற்கு தலைமை தாங்கி பாவைப் பாடல் போட்டியில் வெற்றி பெற்ற குழந்தைகளுக்கு



சென்னை

ஸ்ரீ வெங்கடேசப்பெருமாள் கோயில்

பாவை விழா.

பரிசுகள் வழங்கினார்கள். மேலும் சென்னை அறநிலைய பாதுகாப்புத்துறை Assistant Commissioner திரு N. S. ராமசந்திரன் B. A. B. L., அவர்கள் விழாவில் கலந்து கொண்டு



சென்னை

ஸ்ரீ வெங்கடேசப்பெருமாள் கோயில்

பாவை விழாவில்

கலந்துகொண்ட சிறுமிகள்.

சென்னை

ஸ்ரீ வெங்கடேசப்பெருமாள் கோயிலில்

துணை ஆணையர் அவர்கள் தலைமையில்

நடைபெற்ற

பாவை விழா நிகழ்ச்சி.



விழாவைச்சிறப்பித்து வைத்தார்கள், விழா சமயம் ஔவை திரு நடராஜன் அவர்கள் அருமையாக சொற்பொழிவாற்றினார்கள். ஷை ஆலய மானேஜர் திரு D ராமனுதன் அவர்கள் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்தி வைத்தார்கள்.

3 சென்னை : 7—1—71 வியாழக்கிழமையன்று தங்கசாலைத் தெருவில் உள்ள ஸ்ரீ ஏகாம்பரேஸ்வரர் தேவஸ்தானத்தில் பாவை மகாநாடு சென்னை உயர்நீதி மன்ற நீதிபதி மாண்புமிகு திரு N. கிருஷ்ணசாமி ரெட்டியார் அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. அதுசமயம் சென்னை, இந்துசமய அறநிலைய ஆட்சித்துறை துணை ஆணையர் உயர்திரு K. ராஜா B. A, B. L, அவர்கள் விழாவை துவக்கிவைத்தார்கள். திரு S. சூரிய நாராயணன் அறங்காவலர் அவர்கள் வரவேற்புரை வழங்கினார்கள். மேலும் திருமதி புனிதவதி இளங்கோவன் M. A., அவர்கள் 'திருப்பாவை' என்ற பொருள் பற்றியும்,



சென்னை ஸ்ரீ ஏகாம்பரேஸ்வரர் கோயிலில்
நடைபெற்ற பாவை விழாவிற்கு
வருகை தரும் துணை ஆணையருக்கு
வரவேற்பளித்தல்.

சென்னை ஸ்ரீ ஏகாம்பரேஸ்வரர் கோயில்
பாவை விழாவிற்கு
நீதிபதி மாண்புமிகு N. கிருஷ்ணசாமி ரெட்டியார்,
துணை ஆணையர் முதலியோருக்கு
வரவேற்புரை வழங்குதல்.





சென்னை
ஸ்ரீ ஏகாம்பரேஸ்வரர் கோயில்
பாவை விழாவில்
கலந்துகொண்டவர்கள்.

திருமதி ஜெயகுமாரி பாஸ்கரன் அவர்கள் 'திருவெம்பாவை' என்னும் பொருள் பற்றியும் அழகாக சொற்பொழிவு ஆற்றினர்கள். குமாரி V. ராஜலெக்ஷ்மி அவர்களின் ஸ்ரீ ஆண்டாள் நடனம் நடைபெற்றது. தலைவர் அவர்கள் பாவைப்பாடல் போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்குப் பரிசுகள் வழங்கினர். அறங்காவலர் குழுத் தலைவர் திரு M. P. ராஜன் அவர்கள் நன்றி நவிலலுடன் விழா இனிது முடிவுற்றது. நிர்வாக அதிகாரி திரு T. சிதம்பரம் B. Sc., அவர்களும், அறங்காவலர் குழுத் தலைவர் திரு M P. ராஜன் அவர்கள், அறங்காவலர்கள் திரு V. T. முனுசாமி திரு S. சூரிய நாராயணன் ஆகியோர் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை நல்லமுறையில் நடத்திவைத்தார்கள்.

4 சென்னை : 8—1—71 வெள்ளிக்கிழமையன்று பள்ளியப்பன் தெருவில் உள்ள ஸ்ரீ அருணசலேஸ்வரர் & வரதராஜ பெருமாள் தேவஸ்தானத்தில் திருப்பாவை திருவெம்பாவை மகாநாடு மிக நல்லமுறையில் சென்னை இந்துசமய அறநிலைய ஆட்சித்துறை துணை ஆணையர் திருமிகு K. ராஜா, B. A., B. L., அவர்கள் சீரிய தலைமையில் நடைபெற்றது. இறைவணக்கத்திற்குப் பிறகு தர்மகர்த்தா திரு வடிவேல் சுந்தரேச முதலியார் J. P. அவர்கள் எல்லோரையும் வரவேற்று பேசினர்கள். தேவஸ்தான நிர்வாக அதிகாரி திரு S. கணேசன் B A., அவர்கள் காஞ்சி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரியார் ஸ்வாமிகளின் ஆசியுரையை வாசித்தார்கள். தலைவர் தமது முன்னுரையில் இத்தகைய மாநாட்டின் நோக்கத்தை காஞ்சி பெரியவாள் ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரியார் சுவாமிகள் அவர்களால் ஆரம்பிக்கப்பட்டதையும், இன்று இம்மாநிலம் முழுவதும் சிறப்பு விழா தேவஸ்தானங்கள் நடத்தி வருவதும், இம்மாநாடு வெற்றியாகவும் நாளுக்கு நாள் பெருகிவருகிறது என்பதை அந்தந்த வேஸ்தானத்தில் பங்கெடுக்கின்ற குழந்தைகளின் எண்ணிக்கை அதிகரிப்பதையும் சுட்டிக்காட்டி அறிபதொரு சொற்பொழிவாற்றினர்கள். திருமதி A. லட்சுமி தமிழாசிரியை ஏ ஆர். சி. மகளிர் உயர்நிலைப்பள்ளி 'திருப்பாவை' பற்றியும், மாநகராட்சி உயர்நிலைப்பள்ளி திரு புலவர் காமாட்சிநாதன் அவர்கள் 'திருவெம்பாவை' பற்றியும் அருமையாகச் சொற்பொழிவாற்றினர்கள். தலைவர் அவர்களால் சிறந்த பரிசுகள் வெற்றிப் பெற்ற மாணவ மாணவிகளுக்கு வழங்கப்பட்டது காஞ்சி ஸ்ரீ ஆசார்ய சுவாமிகளின் பிரசாதமும், வெள்ளிக் காசும் வழங்கப்பட்டன. தலைவர் பின்னுரையுடன் தர்மகர்த்தா திரு எத்திராஜுலு முதலியார் அவர்கள் நன்றி கூறினர். கும்பகோணம் சங்கீத இசைக் கலைவேந்தன் திரு T. N சங்கரநாதன் குழுவினர் "பக்த பிரஹலாதா" எனும் பொம்மலாட்டம் நடைபெற்று விழா இனிது முடிவுற்றது. விழாவிற்கான ஏற்பாடுகளை நிர்வாக அதிகாரி திரு S. கணேசன் B. A, அவர்கள் நல்லமுறையில் ஏற்பாடு செய்திருந்தார்.

5 சென்னை : 9—1—71, 10—1—71 தேதிகளில் அடையார் தர்மபரிபான சபையின் சார்பில் ஸ்ரீ ராதாகல்யாண மஹோத்ஸவம் மிகவும் நல்ல முறையில் நடைபெற்றது. 14—1—71ல் திருப்பாவை—திருவெம்பாவை மகாநாடு திருமதி அன்னபூரணி வீரப்ப செட்டியார் அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. ஸ்ரீமதி துளசி அம்மாள் ஸ்ரீமதி அன்னபூரணி வீரப்ப செட்டியார், ஸ்ரீமதி வசுமதி நடராஜன் ஆகியோர் நடுவர்களாக இருந்து பாவைப் பாடல் போட்டியில் வெற்றிபெற்ற குழந்தைகளுக்குப் பரிசுகள் வழங்கினர்கள். ஷை ஸத் சங்க சேர்மன் திரு S. சேஷாத்திரி அவர்களும் மற்ற அங்கத்தினர்களும் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை நல்ல முறையில் நடத்திவைத்தார்கள்.

6 சென்னை : 12—1—71 செவ்வாய்க்கிழமை யன்று சென்னை வடபழனியிலுள்ள ஸ்ரீ வடபழநி ஆண்டவர் கோயிலில் திருப்பாவை — திருவெம்பாவை மாநாடு சென்னை உயர் நீதிமன்ற நீதிபதி மேன்மை தங்கிய S. மகாராஜன் B, Sc., B. L., அவர்கள் தலைமையில்

மிகவும் சிறப்பாக நடைபெற்றது. தமிழக இந்துமத அறநிலைய ஆட்சித்துறை ஆணையாளர் உயர்திரு K. S. நரசிம்மன் B. A., B. L., I. A. S. அவர்கள் துவக்கவுரை நிகழ்த்தி விழாவை சிறப்பித்தார்கள். சென்னை இந்துமத அறநிலைய ஆட்சித்துறை துணை ஆணையாளர் உயர் திரு K. ராஜா, B. A., B. L., அவர்கள் சிறப்புரை ஆற்றினார்கள். திரு ஔவை து. நடராஜன் M. A. M. Litt., அவர்கள் அழகாக சொற்பொழிவாற்றினார்கள். "இரு பாவைகள்" எனும் பொருள்பற்றி தலைவர் அவர்கள் பாவைப் பாடல் போட்டியில் வெற்றிபெற்ற குழந்தைகளுக்குப் பரிசுகள் வழங்கினர். நன்றி நவிலலுடன் விழா இனிது முடிவுற்றது. நிர்வாக அலுவலர் திரு S. பாலசுப்பிரமணியன் B. A., B. L., அவர்களும், அறங்காவலக் குழுத் தலைவர் திரு V. சுந்தரமூர்த்தி முதலியார் M. A., B. L., அறங்காவலர்கள் திரு K. கமலக்கண்ணன், திரு சாரதா பரமேஸ்வரன் B. A., திரு V. பாலகிருஷ்ணன் ஆகியோர்கள் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்லமுறையில் நடத்தி வைத்தார்கள்.

7 சென்னை : *14—1—71* பொங்கல் தினத்தன்று மைலை கஸ்தூர்பா சங்கத்தின் சார்பில் திருப்பாவை - திருவெம்பாவை விழா மிகச் சிறப்பாக உயர்திரு S. கோதண்டராம நயினார் B. A., B. L., அவர்களின் முன்னிலையில் கொண்டாடப்பட்டது. தலைவர் இச்சங்கத்தில் செய்துவரும் தொண்டுகள்பற்றியும் திருப்பாவை — திருவெம்பாவை தத்துவங்களையும் எடுத்துரைத்தார். மேலும் அவர் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீ சங்கராசாரியார் சுவாமிகள் இச்சங்கத்திற்கு ஆசிகூறி அளித்த பிரசாதம். திருப்பாவை—திருவெம்பாவை புஸ்தகங்கள், வெள்ளி காசுகள் இவைகளை குழந்தைகளுக்கு வழங்கி அதன் முக்கிய கருத்துக்களை மிக அழகாக எடுத்துக் கூறினர். இவ் விழாவில் பெற்றோர்களும் பொதுமக்களும் சுமார் 500 பேர் கலந்து கொண்டனர், அனைவருக்கும் உயர்திருவாளர் எம். ஜி. ராமச்சந்திரன் M. L. A. அவர்களின் உதவியால் சர்க்கரைப் பொங்கல், வடை எல்லோருக்கும் விநியோகம் செய்யப்பட்டது. உயர்திருவாளர் B. K. சுப்ரமண்யம், திருமதி தைலா அனந்தராமன் B. Sc., இவர்கள்



சென்னை

மயிலை கஸ்தூர்பா சங்கத்தின் சார்பில்

நடைபெற்ற பாவை கலா நிகழ்ச்சியில்

கலந்து கொண்டவர்கள்.



சென்னை

மயிலை கஸ்தூர்பா சங்கத்தில் நடைபெற்ற

இரு சகோதரிகளின்

நடன நிகழ்ச்சி.

நடுநிலையர்களாக இருந்து பாவைப் பாடல் போட்டியில் தேர்வு பெற்றவர்களுக்குப் பரிசுகள் வழங்கினர். இவ் விழாவில் ராஜம் ராமஸ்வாமி அவர்கள் எல்லோரையும் வரவேற்று ஆரம்பித்துவைத்தார். சங்கப் பொதுச் செயலாளர் திரு செல்வராஜன் அவர்கள் நன்றிகூற விழா இனிது முடிவுபெற்றது. செயலர் திரு செல்வராஜன் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை நல்லமுறையில் நடத்திவைத்தார்கள்.

8 சென்னை : *15—1—71* வெள்ளிக்கிழமை யன்று சென்னை அரண்மனைக்காரத் தெருவிலுள்ள ஸ்ரீ கச்சபேஸ்வரர் திருக்கோயிலில் திருப்பாவை — திருவெம்பாவை மாநாடு சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி மாண்புமிகு R. சதாசிவம் B. A., M. L. அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. இந்து அறநிலைய ஆட்சித்துறை ஆணையர் உயர்திரு K. S. நரசிம்மன் B. A , B L., I, A. S. அவர்கள் ஆசியுரை வழங்கவும், சென்னை இந்து அறநிலைய ஆட்சித்துறை துணை ஆணையர் உயர்திரு K. ராஜா B. A.. B. L., அவர்கள் துவக்வுரை வழங்கவும் விழா தொடங்கியது. இந்து அறநிலைய ஆட்சித்துறை உதவி ஆணையர் உயர்திரு N. S. இராமச்சந்திரன் B. A., B. L., அவர்களும் கலந்துகொண்டு சிறப்பித்தார்கள். திருவையாறு ஸ்ரீ S. வெங்கடேச சாஸ்திரிகள் 'திருப்பாவை' பற்றியும், சித்தாந்த வித்தகர் கயப்பாக்கம் சோமசுந்தரம் செட்டியார் அவர்கள் 'திருவெம்பாவை' பற்றியும் சிறப்புரையாற்றினர்கள். மற்றும் கல்பாக்கம் கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள், நாவல்பாக்கம் வரதாச்சாரியார் ஆகியோரும் உரையாற்றினர்கள். பாவைப்போட்டிகளில் வெற்றிபெற்ற குழந்தைகளுக்கு பரிசுகள் வழங்கப்பட்டது, உயர்திரு A. சுப்ரமண்யஐயர் M. A. B. L., அறங்காவலர் குழுத்தலைவர் வரவேற்புரை வழங்க நிர்வாக அதிகாரி திரு வை. கிருஷ்ண பாண்டியன் B. A.. B. L., அவர்கள் நன்றியுரை நல்கவும் விழா இனிது முடிவுற்றது. விழாவுக்குரிய ஏற்பாடுகளை சிறப்புடன் அமையும் வண்ணம் நிர்வாக அதிகாரிக்கு முழு ஒத்துழைப்பையும் அறங்காவலர்கள் நல்கியிருந்தனர்.

9 சென்னை-குரோம்பேட்டை : *17—1—71* ஞாயிறு அன்று பாரதி கலைமன்றத்தின் சார்பில் திருப்பாவை-திருவெம்பாவை விழா சர்வமங்களா,ஸ்ரீராஜ ராஜேஸ்வரி ஆலயத் ஸ்தாபகர் திரு ராஜகோபால சுவாமிகள் அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது.

அதுசமயம் பாவை பாசுரங்களை மனப்பாடம் செய்து ஒப்புவித்த குழந்தைகளுக்கு தலைவர் அவர்கள் ஸ்ரீ ஆசார்ய சுவாமிகள் அவர்கள் அனுக்ரஹ பிரசாதத்தை வழங்கினுர்கள். அவ்வமயம் அட்வகேட் திரு சம்பத்குமார் அவர்களும், எழுத்தாளர் திரு "ஆர்வி" அவர்களும் ஷை விழாவில் கலந்துகொண்டு சிறபித்தார்கள். பாரதி கலை மன்ற அமைப்புச் செயலாளர் திரு S. மஹாலிங்கம் அவர்கள் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்தி வைத்தார்கள்.

10 சென்னை : 20—1—71 புதன்கிழமையன்று சென்னை, முல்லாசாகிப் தெரு ஸ்ரீ ரெங்கநாத ஸ்வாமி கோயிலில் திருப்பாவை-திருவெம்பாவை மாநாடு சென்னை பிரதம மாகாண மாஜிஸ்டிரேட் உயர்திரு S. நடராஜன் B. A., B. L., அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. அவ்வமயம் இந்து சமய அறநிலைய ஆட்சிதுறை துணை ஆணையர் உயர்திரு K. ராஜா B. A., B. L., அவர்கள் மகாநாட்டை துவக்கி வைத்தார்கள். சென்னை உதவி ஆணையர் திரு N. S. ராமசந்திரன் B. A., B. L., அவர்கள் சிறப்புரை ஆற்றினுர்கள்.



சென்னை முல்லா சாஹிப் தெரு
ஸ்ரீ ரெங்கநாத சுவாமி கோயிலில்
நடைபெற்ற பாவை விழா நிகழ்ச்சியில்
துணை ஆணையர் திரு K. ராஜா அவர்கள்
சொற்பொழிவாற்றுகிறுர்.



சென்னை
ஸ்ரீ ரெங்கநாதசுவாமி கோயில்
பாவை விழா.

மகாவித்வான் திரு மே. வீ வேணுகோபால் பிள்ளை அவர்கள் 'திருப்பாவை' பற்றியும் திருமதி ஜெபகுமாரி பாஸ்கரன் அவர்கள் 'திருவெம்பாவை' பற்றியும் சொற்பொழிவு ஆற்றினுர்கள். மாநாட்டுத்தலைவர் உயர்திரு S நடராஜன் B. A., B. L., அவர்கள் பாவைப் போட்டியில் கலந்துகொண்டு வெற்றிபெற்ற குழந்தைகளுக்குப் பரிசுகள் வழங்கினுர். அறங்காவலர் திரு S சூரியநாராயணன் அவர்கள் நன்றிகூற மாநாடு இனிது முடிந்தது. மாநாடு



சென்னை முல்லா சாஹிப்தெரு

ஸ்ரீ ரெங்கனுதசுவாமி கோயில்

பாவை விழாவில்

கலந்து கொண்டவர்கள்.

சிறப்பாக நடைபெற ஏற்பாடுகள் அனைத்தையும் நிர்வாக அதிகாரி திரு G. ராஜாராம் முன்னின்றுநடத்தி வைத்தார். போட்டியில் கலந்துகொண்ட மாணவ–மாணவிகளுக்கு காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் ஆசியுடன் கூடிய வெள்ளிக்காசுகள் வழங்கப் பட்டது.

11 சென்னை : 12—2—71 வெள்ளிக்கிழமையன்று நம்மாழ்வார் தெருவில் உள்ள ஸ்ரீ பாலகிருஷ்ண ஸ்தோத்திர வகுப்பின் மூன்ருவது ஆண்டு பாவை விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. விழா சமயம் பல ஆஸ்திகப் பெரியவர்கள் கலந்துகொண்டனர். காலக்ஷேப கலாநிதி லேடி பாகவதர் ஸ்ரீமதி பன்னிபாய் அவர்களின் சொற்பொழிவு மிகவும் சிறப்பாக



சென்னை

ஸ்ரீ பாலகிருஷ்ண ஸ்தோத்ர வகுப்பு

கலா நிகழ்ச்சி.



சென்னை

ஸ்ரீ பாலகிருஷ்ண ஸ்தோத்ர வகுப்பு

பாவை விழா

கலாநிகழ்ச்சியில் கலந்து கொண்ட குழந்தைகள்.



சென்னை நம்மாழ்வார்தெரு

ஸ்ரீ பாலகிருஷ்ண ஸ்தோத்திர வகுப்பில்

நடைபெற்ற பாவை விழா

கலா நிகழ்ச்சியில்

பங்குகொண்ட குழந்தைகள்.



சென்னை

ஸ்ரீ பாலகிருஷ்ண ஸ்தோத்ர வகுப்பில்

பாவை இன்னிசை விழா.

நடைபெற்றது. குழந்தைகள் ஸ்தோத்ரப் பாடல்கள் பாடினர்கள். மேலும் மோகூர் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி & பார்ட்டி சங்கீதக் கச்சேரி நடைபெற்றது. தசாவதார கும்மி பின்னல்

கோலாட்டம் நடைபெற்றது. திருப்புகழ் ஆசிரியர் ஸ்ரீ துரைக்கண்ணு & பார்ட்டி ஹார்மோனியம். ஸ்ரீ ஆண்டாள் திருக்கல்யாணம் நடைபெற்றது. நன்றி நவிலலுடன் விழா இனிது முடிவடைந்தது. ஸ்ரீ பாலகிருஷ்ண ஸ்தோத்ர வகுப்பின் அங்கத்தினர்களும் ஷை வகுப்பின் காரியதரிசி திரு R. பாலகிருஷ்ணன் அவர்களும் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்லமுறையில் நடத்திவைத்தார்கள்.

12 சென்னை: 20—2—71 சனிக்கிழமையன்று சென்னை தியாகராய நகர் இந்து தர்ம மன்றத்தின் ஐந்தாம் ஆண்டு நிறைவு விழாவும் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகளின் உத்தரவுக்கிணங்க நடைபெற்ற திருப்பாவை —திருவெம்பாவைப் போட்டிக்கான பரிசளிப்பு விழாவும் மயிலாப்பூர் பி. எஸ். உயர்நிலைப்பள்ளியில் உயர்திரு நீதிபதி கிருஷ்ணசாமி ரெட்டியார் அவர்கள் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. இந்து சமய அறநிலையப் பாதுகாப்புத் துணை ஆணையர் திரு K. ராஜா அவர்கள்




சென்னை
இந்து தர்ம மன்ற பாவை விழாவில்
கலந்து கொண்ட உயர்நீதிமன்ற நீதிபதி
திரு N. கிருஷ்ணசாமி ரெட்டியார் அவர்களுக்கு
வரவேற்புரை வழங்குதல்.



சென்னை இந்து தர்ம மன்றத்தில்
நடைபெற்ற பாவை விழா
நிகழ்ச்சியில்
கலந்து கொண்ட குழந்தைகள்



சென்னை இந்து தர்ம மன்றத்தில்
நடைபெற்ற பாவை விழாவில
அறநிலைய பாதுகாப்புத் துறை துணை ஆணையர்
திரு K. ராஜா, B. A., B. L. அவர்கள்
சொற்பொழிவாற்றுகிறார்.

விழாவைத் தொடங்கி வைத்துப் பேசுகையில் "திருப்பாவை — திருவெம்பாவை" பாடும் முறை இன்று நேற்று ஏற்பட்டதாகக் கருதுவது சரியல்ல. 1949ம் ஆண்டிலேயே திருப்பாவை — திருவெம்பாவை பாடும் பக்தி இயக்கம் திருவிடைமருதூரில் ஆரம்பிக்கப்பட்டது என்றுகூறினர். தலைவர் அவர்கள் பாவைப் பாடல் போட்டியில் வெற்றிபெற்ற மாணவ மாணவிகளுக்குப் பரிசுகள் வழங்கினர். தமிழ்நாடு கல்வி இலாகா இயக்குனர் திரு எஸ். வி. சிட்டிபாபு அவர்கள் திருப்பாவை — திருவெம்பாவை மலரை வெளியிட்டுச் சிறப்புச் சொற்பொழிவாற்றினர்கள். நன்றியுரைக்குப் பிறகு விழா இனிது முடிவடைந்தது. ஷை மன்ற தலைவர் திரு எஸ். வடிவேலு அவர்களும் செயலாளர் திரு V மீனட்சிசுந்தரம் அவர்களும் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்லமுறையில்



திரு சிட்டிபாபு அவர்களுக்கு
யானை மூலம் மாலை அணிவித்தல்.



சென்னை
இந்து தர்ம மன்றத்தின் பாவை விழாவில்
பரிசுகள் வழங்கப்படுகிறது.



சென்னை இந்து தர்ம மன்றத்தில்
நடைபெற்ற விழாவில்
கலந்து கொண்டு சிறப்பித்தவர்கள்.



சென்னையில் நடைபெற்ற பாவை விழாவில்
உயர்திரு N. கிருஷ்ணசாமிரெட்டியார்
அவர்கள் சுழற்கேடயத்தை வழங்குகிருர்கள்.



சென்னை இந்து தர்ம மன்ற விழாவில்
கலந்து கொண்ட உயர்திரு
N. கிருஷ்ணசாமி ரெட்டியார் அவர்கள்
சொற்பொழிவாற்றுகிறார்கள்.



சென்னையில் நடைபெற்ற பாவை விழாவில்
உயர் நீதிபதி திரு N. கிருஷ்ணசாமி ரெட்டியார்
அவர்கள் சுழற்கேடயத்தை வழங்குகிறார்கள்.



சென்னை இந்து தர்ம மன்றத்தின் சார்பில்

நடைபெற்ற பாவை விழா நிகழ்ச்சியில்

கல்வி இலாகா இயக்குநர்

திரு சிட்டிபாபு அவர்கள்

சொற்பொழிவாற்றுகிறார்.



சென்னை இந்து சமய மன்றத்தின் சார்பில்

நடைபெற்ற பாவை விழாவில்

கலந்து கொண்டவர்கள்.



சென்னையில் நடைபெற்ற(P. S. S. ஹைஸ்கூலில்) பாவை விழா நிகழ்ச்சியில் கலந்துகொள்ளவரும் கல்வி இலாகா இயக்குநர் திரு சிட்டிபாபு அவர்களுக்கு வரவேற்புரை அளித்தல்.



சென்னை
இந்து தர்ம மன்ற பாவை விழாவில்
கலந்து கொண்டவர்கள்.

நடத்திவைத்தார்கள். விழா முடிவில் காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகள் அவர்களால் மன்றத்துக்கு அளிக்கப்பட்ட சுழற்கேடயங்களையும், வெள்ளிக் காசுகளையும் திரு கிருஷ்ணசாமி ரெட்டியார் அவர்கள் பரிசாக அளித்தார்கள்.

18 சென்னை–மேல மாம்பலம்: 27–1–71 புதன்கிழமை அன்று லலித் கலா நிகேதன் அரங்கில், மேல மாம்பலம் மாதர் சத் சங்கம், (குப்பைய செட்டிதெரு) சார்பில் திருப்பாவை — திருவெம்பாவை 7-வது ஆண்டு விழா மிகவும் சிறப்பாக நடைபெற்றது. அதுசமயம் பாவைப் பாடல் போட்டியில் வெற்றிபெற்ற குழந்தைகளுக்குப் பரிசுகள் வழங்கப்பட்டது. குமாரி உஷாக்கண்ணனின் பரதநாட்டிய நிகழ்ச்சி நடைபெற்றது. ஹிமாலயா சென்டரின் கோதை நாச்சியார் நடன நாடகம் நடைபெற்றது. டை விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் மாதர் சத் ஸங்கத்தார் செய்து விழாவை சிறப்பித்தார்கள்.

14 சென்னை : 24—1—71 ஞாயிற்றுக்கிழமை மேல மாம்பலம் பாவைக் கமிட்டி ஆதரவில் ஸ்ரீ அயோத்யா அச்வமேத மஹா மண்டபத்தில் திருப்பாவை — திருவெம்பாவை மகாநாடு சென்னை, இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை துணை ஆணையர் உயர்திரு K. ராஜா B. A., B L., அவர்கள் சீரிய தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. அவ்வமயம் சென்னை ராம் ஸமாஜ் செயலாளர் திருK ஸ்ரீனிவாசன் வரவேற்புரை வழங்கினர். அதுசமயம் '' திருப்பாவை '' என்னும் பொருள்பற்றி ஸ்ரீ K. V. சந்தானகோபாலாச்சாரியார் ஸ்வாமிகள் அவர்களும் '' திருவெம்பாவை '' என்னும் பொருள்பற்றி திருக்கோவில் ஆசிரியர்

திரு N. R. முருகவேள் B. O. L.. அவர்களும் மிகவும் சிறப்பாக உரையாற்றினர்கள். பாவைப் பாடல் போட்டிகளில் கலந்துகொண்டு வெற்றிபெற்ற குழந்தைகளுக்குப் பரிசுகள் வழங்கப்பட்டது. தலைவர் முடிவுரைக்குப் பிறகு வந்தனோபசாரத்துடன் விழா இனிது முடிவடைந்தது. பாவைக் கமிட்டியார் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்லமுறையில் நடத்திவைத்தார்கள்.

15 சென்னை-கிழக்குத்தாம்பரம் : ஸ்ரீ கந்தசாமிமுதலியார் காலனியில் அமைந்துள்ள ஸ்ரீ வித்யாமந்திர் நர்ஸரி பள்ளியில் ஸ்ரீ கபால சிவன் சோஷியல் சர்வீஸ் சொஸைட்டி கட்டிடத்தில் ஸ்ரீ ராம் ராம் சத் சங்கம் மூலம் திருப்பாவை — திருவெம்பாவை பாடல் போட்டியும், பரிசளிப்பு விழாவும் மிகவும் நல்லமுறையில் நடைபெற்றது. திரு எம். டி. துவாரகாநாதன் கடவுள் வாழ்த்துப் பாடினர். ஸ்ரீமதி விஜயலெட்சுமி திருமலாச்சாரி தலைமைவகித்தார். திரு ராமச்சந்திர அய்யர் ஸ்ரீ ராம் ராம் ஸத் சங்கத்தின் ராமர் படத்தைத் திறந்துவைத்தார். வெற்றிபெற்ற மாணவர்களுக்கு முதல் பரிசுகளை திரு டி. ஜே. பத்மநாப அய்யரும் ஆறுதல் பரிசுகளை திரு எம். ராதாகிருஷ்ணனும், திரு எஸ். கிருஷ்ணமூர்த்தி, திரு கே. சிவராமன், திரு ராம் ராம் ஆகியோர் வழங்கினர்கள். திருப்பாவையும் — திருவெம்பாவையும் என்ற பொருள்பற்றி திரு அனந்தாச்சாரி சொற்பொழிவாற்றினர், திரு ராகவன் யாவருக்கும் இனிப்புகள் வழங்கினர். திரு டி. ஜே. பத்மநாபய்யர் "ராம் ராம்" அவர்களுக்குப் பொன்னடைப் போர்த்தினர். திரு கே. சிவராமன் நன்றிகூறினர்.

16 பெரிய தகரகுப்பம் : 4—1—71 திங்கள்கிழமையன்று வடார்காடு மாவட்டம் வாலாஜா வட்டம் பெரிய தகரகுப்பம் கிராமத்தில் தமிழ்நாடு தெய்வீகப் பேரவை சார்பில் மாதவழிபாடு துவக்கவிழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. அதுசமயம் திரு செங்கல்வராய ரெட்டியார் அவர்கள் தலைமைதாங்கி விழாவை சிறப்பித்தார்கள். திரு துரைசாமி ரெட்டியார் அவர்கள் விழாவில் கலந்துகொண்டு விழாவைச் சிறப்பித்துவைத்தார்கள். மேலும் ஒழுகூர் அரசினர் உயர்நிலைப்பள்ளி, தமிழாசிரியர் திருவாளர் வித்வான் வரதராஜன் அவர்கள் "திருப்பாவை" பற்றியும், வாலாஜாபேட்டை ஒய்வுபெற்ற ஆசியர் திருவாளர் M, வெங்கிடசாமி அவர்கள் "திருவெம்பாவை" என்னும் பொருள்பற்றியும் அழகாக சொற்பொழிவாற்றினர்கள். திரு K. S. கன்னியப்பன் அவர்கள், கிராமவாசிகளும் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்லமுறையில் நடத்தி வைத்தார்கள்.

17 வாலாஜாபேட்டை : 8—1—71, 9—1—71 ஆகிய தேதிகளில் வாலாஜா பேட்டை டிரங்க்ரோட்டில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ விசாலாட்சி அம்பாள் சமேத ஸ்ரீ காசி விஸ்வநாதர் ஆலயத்தில் திருப்பாவை — திருவெம்பாவை விழா மிகவும் சிறப்பாக நடைபெற்றது. 8—1—71ல் பூண்டி அரசினர் உயர்நிலைப்பள்ளி தமிழாசிரியர் வித்வான் திரு C.V. சேஷாத்திரி அவர்கள் "கோதை கண்ட கண்ணன்" என்னும் பொருள்பற்றியும், இராமாயண ஸ்ரீநிவாசன் அவர்கள் "பரமன் அடிகாட்டும் பாவை" என்னும் பொருள் பற்றியும் அழகாக சொற்பொழிவாற்றினர்கள். 9—1—71 அன்று ஒழுகூர் அரசினர் உயர்நிலைப்பள்ளி தமிழாசிரியர் வித்துவான் திரு K. N. வரதராஜன் அவர்கள் "பாவையும் பரமனும்" என்னும் பொருள்பற்றியும், வாலாஜா ஒய்வுபெற்ற ஆசிரியர் திரு M. வெங்கடசாமி முதலியார் அவர்கள் "மணிவாசகரின் பாவை" என்னும் பொருள்பற்றியும் அழகாக சொற்போழிவாற்றினர்கள். வாலாஜாபேட்டை, மங்களாம்பாள் உயர்தர ஆரம்பப்பள்ளி தலைமையாசிரியர் திரு T. M. வெங்கடராமன் B. A. B. T., அவர்கள் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து மிக நல்ல முறையில் நடத்திவைத்தார்கள்.

18 திருவண்ணாமலை : 10—1—71 ஞாயிற்றுக்கிழமையன்று ஸ்ரீ அருணாசலேஸ்வரர் தேவஸ்தானத்தில் திருப்பாவை—திருவெம்பாவை மாநாடு திருவண்ணாமலை கௌதம ஆஸ்ரமம் ஸ்ரீலஸ்ரீ ஸ்வாமி ஸ்ரீநிவாசலு அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. அதுசமயம் திருவதிகை அப்பர் இல்ல ஸ்தாபகத் தலைவர் திரு ஆர். சண்முக சுந்தரம் அவர்கள் 'திருவெம்பாவை' என்னும் பொருள்பற்றியும் 'திருப்பாவை' என்னும் பொருள் பற்றி திருவண்ணாமலை டேனிஷ் மிஷன் உயர்நிலைப்பள்ளி வித்வான் ஸ்ரீ உ வே. எம். வி. லக்ஷ்மிநரசிம்மாசாரியார் அவர்களும் அழகாக சொற்பொழிவாற்றினார்கள். தலைவர் அவர்கள் பாவைப்போட்டியில் கலந்துக்கொண்டு வெற்றிப்பெற்ற மாணவமாணவிகளுக்குப் பரிசுகள் வழங்கினர். நன்றி நவிலலுடன் விழா இனிது முடிவடைந்தது. திரு கு. சிதம்பரம், பி. ஏ., நிர்வாக அதிகாரி அவர்களும், அறங்காவலர் குழுத்தலைவர் திரு பொ. பழனி முதலியார் அவர்களும் அறங்காவலர்கள் திரு பி. எஸ். மாணிக்கவேலு, திரு வி. சதானந்தம், திரு கே. எல் வெங்கடாசல உடையார், திரு டி. வி. சுப்பிரமண்ய செட்டியார் ஆகியோர் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து மிக நல்ல முறையில் நடத்தி வைத்தார்கள்.

19 விழுப்புரம் : 10—1—71 ஞாயிற்றுக்கிழமையன்று ஸ்ரீ கைலாஸநாதர் தேவஸ்தானத்தில் திருப்பாவை—திருவெம்பாவை மாநாடு மிகவும் சிறப்பாக நடைபெற்றது. அதுசமயம் விழுப்புரம் டாக்டர் தியாகராஜன் உயர்நிலைப்பள்ளி தலைமைத் தமிழாசிரியர் வித்வான் திரு A. வைத்தியநாதன் M. A., B. O. L., L. T. அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கி விழாவைச் சிறப்பித்து வைத்தார்கள் நிர்வாக அறங்காவலர் திரு D. S. பத்தர் அவர்கள் வரவேற்புரை வாசித்து பாவைப் பாடல் போட்டிகளில் கலந்துகொண்ட குழந்தைகளுக்கு ஸ்ரீ ஆச்சார்ய சுவாமிகள் அனுக்ரஹித்த பிரசாதத்தை வழங்கி அருளினர். விழுப்புரம் வழக்கறிஞர் திரு கு வரததேசிகன் B. Sc B. L., அவர்கள் "திருப்பாவையில் இயற்கை வளம்" என்னும் பொருள் பற்றியும், பூதலூர் புலவர் திரு கி. வெங்கடசாமி ரெட்டியார் அவர்கள் "நானேதான் ஆயிடுக" என்னும் பொருள் பற்றியும். ஆசிரியர் திரு E. A. சந்திரசேகர அய்யர் B. A. B. T. அவர்கள் "பாடரோ நம் சிவனை" என்னும் பொருள் பற்றியும் நல்லிசை திருமுறை நாவினர் திரு M. நடராஜ முதலியார் அவர்கள் "மாணிக்கவாசகர் மகிமை' என்னும் பொருள் பற்றியும் அழகாகச் சொற்பொழிவாற்றினார்கள், தலைவர் அவர்கள் குழந்தைகளுக்கு பரிசுகள் வழங்கிய பிறகு அறங்காவலர் திரு K. சௌரிராஜலு நாயுடு அவர்களின் நன்றி நவிலலுடன் விழா இனிது முடிவடைந்தது. திரு D. S. பத்தர் அவர்கள் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்திவைத்தார்.

20 ஆரணி, கொசப்பாளையம் : 11—7—71 திங்கட்கிழமையன்று சுப்ரமண்ய சாஸ்திரி வீதியில் எழுந்தருளியிருக்கும் துர்க்க பிரஸாத் ஸ்ரீ கோதண்டராமசாமி சன்னிதானத்தில் திருப்பாவை—திருவெம்பாவை 16 ம் ஆண்டு நிறைவு விழா ஆரணி திருப்பாவை திருவெம்பாவைக் குழுவின் சார்பில் வெகு சிறப்பாக நடைபெற்றது. அதுசமயம் ஆரணி வழக்கறிஞர் திரு பட்டாபிராமய்யர் அவர்கள் தலைமை தாங்கி விழாவைச் சிறப்பித்தார்கள். அன்று இரு சகோதரிகள் பானுமதி, சாவித்திரி ஆகியோரின் இசை விருந்து நடைபெற்றது ஆசிரியை பெரிய பாப்பாத்தி அம்மாள் முன்னிலையில் பேபி சுசேதா நடனமும் சிறப்பாக நடைபெற்றது. K. கன்னம்மா கடவுள் வணக்கத்துடன் விழா ஆரம்பமாகியது. ஆரணி தினமணி செய்தி நிருபர் திரு A, V. கன்னையா நாயுடு வரவேற்புரை வழங்கினர். முனுக்கப்பட்டு. அரசினர் உயர்நிலைப்பள்ளி, தமிழாசிரியர் புலவர் R. லக்ஷ்மிபதி அவர்கள் 'கோதை

தமிழ்' என்னும் பொருள்பற்றியும் திரு தேவாரம் புகழ் மாணிக்க உடையார் "திருவெம்பாவை சிறப்பு" பற்றியும், சு. சா. உயர்நிலைப்பள்ளி, தமிழாசிரியர் திரு K. ராமசாமி அய்யங்கார் "திருப்பள்ளியெழுச்சியும், தொண்டரடிப்பொடியாழ்வாரும்" என்னும் பொருள் பற்றியும், அழகாகச் சொற்பொழிவாற்றினர்கள். ஆரணி திருநாவுக்கரசு மடாலய டிரஸ்டி திருமதி சாரதாம்பாள் அம்மையார் பரிசுகள் வழங்கினர். அரசினர் மருத்துவமனை ஆலோசகர் (ஆரணி) திரு C. D. வேணுகோபால் முதலியார் அவர்கள் நன்றிகூற, ஆரணி கார்னேஷன் ஆரம்பப்பள்ளி ஆசிரியர் திரு P. K. மார்க்கபந்து அய்யர் அவர்களின் மங்கள வாழ்த்துடன் விழா இனிது முடிவடைந்தது. ஷை திருப்பாவை–திருவெம்பாவை குழுச் செயலாளர் பேபி ஸரஸ்வதி வேணுகோபால் அவர்கள் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்தி வைத்தார்கள்.

21 வேலூர் : 25—12—70 முதல் 16—1—71 வரையில் ஸ்ரீ வெங்கடேஸ்வரா ஹைஸ்கூலில் வேலூர் பக்தர்கள் முயற்சியால் நடைபெற்ற திருப்பாவை-திருவெம்பாவை விழா மிக சிறப்பாக நடைப்பெற்றது. அதுசமயம் 25—12—70 வெள்ளிக்கிழமையன்று வள்ளிமலை ஸ்ரீலஸ்ரீ மௌனகுரு ஸ்வாமிகள் அவர்கள் முன்னிலையில் வடஆற்காடு மாவட்ட ஆட்சித்தலைவர் ஸ்ரீ V. ராமமூர்த்தி I. A. S., அவர்கள் விழாவைத் துவக்கி சொற்பொழிவாற்றினர்கள். 25—12—70 முதல் 29—12—70 வரையில் திருப்பாவை உபன்யாஸங்கள்



வேலூர் பாவை விழாவில்

ஸ்ரீலஸ்ரீ வள்ளிமலை மௌனகுரு சுவாமிகளும், ஸ்ரீ பிள்ளைலோகம் பாஷ்யம் ஐயங்கார் அவர்களும், வடஆற்காடு மாவட்ட கலெக்டர் ஸ்ரீ V. ராமமூர்த்தி, I. A. S. அவர்களும்.



வேலூர் பாவை விழாவில்
ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம்
ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி
சுவாமிகள்
(ஸ்ரீ புதுப்பெரியவாள்)



வேலூர் பாவை விழாவில்
ஸ்ரீ புதுப்பெரியவாள்
அருளுரை வழங்குகிறார்கள்.
பக்கத்தில் மஞ்சக்குடி
ஸ்ரீ ராஜகோபால சாஸ்திரிகள்
வீற்றிருக்கிறார்கள்.

சென்னை நியாய வேதாந்த வித்வான் ஸ்ரீ பிள்ளைலோகம் பாஷ்யமய்யங்கார் ஸ்வாமி அவர்களால் மிகவும் சிறப்பாக நடத்தப்பட்டது. 30—12—70 புதன்கிழமையன்று வேலூர் பிரபல ஆடிட்டர் ஸ்ரீஉ. வே. K, V. ராகவாசாரியார் B. Com., F. C. A. அவர்களால் 'கோதை கோவிந்தனுக்கு உரைத்த பொருள்'' பற்றியும் 31—12—70 வியாழக்கிழமையன்று ஹரிகதா கேசரி சென்னை ஸ்ரீ V.S. வெங்கட்ரமணராவ் அவர்களால் "ஸ்ரீனிவாஸ கல்யாணம்" ஹரிகதா காலக்ஷேபமும் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

*1–1–71* முதல் *10—1—71* வரையில் ப்ரவசன ரத்னகர பண்டிதவதாம்ஸ வேதநிதி அமிர்தவாக்ரிஷி பிரம்மஸ்ரீ மஞ்சகுடி K. ராஜகோபாலசாஸ்திரிகள் அவர்களால் ஸ்ரீ ஸ்காந்த புராணம், ஸ்ரீமத் பாகவதம், திருவெம்பாவை உபந்யாஸங்கள் ஆகியவை சிறப்பாக நடைபெற்றது. *7–1–71* அன்று மாலையில் சங்கீத கலா விசாரத வேலூர் M. ராமமூர்த்தி அவர்களின் திருப்பாவை இன்னிசை நடைபெற்றது. இவ்வருடம் நடந்த திருப்பாவை — திருவெம்பாவை விழாவிற்கு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் (புது பெரியவாள்) அவர்கள் இரு தினங்கள் விஜயம்செய்து எல்லோருக்கும் அருளுரைகள் வழங்கி அருளியது மிகச் சிறந்ததோரம்சமாகும்.

*3—1—71*ல் நடந்த பாவை பாடல்கள் போட்டியில் சுமார் *100* குழந்தைகள் கலந்து கொண்டார்கள். போட்டியில் தேரியவர்களுக்கு ஸ்ரீ அம்பாள் வெள்ளிக்காசுகளும் சித்ர — திருப்பாவை புஸ்தகங்களும், போட்டியில் கலந்துகொண்ட எல்லா குழந்தைகளுக்கும் பேனு முதலிய பரிசுகளும் வழங்கப்பட்து. *15* ஆண்டுகாலமாக ஷ விழாவை நடத்திவரும் வேலூர் சங்கீத வித்வான் ஸ்ரீ M. ராமமூர்த்தி அவர்களுக்கு வேலூர் மஹாஜனங்களின் சார்பில் சென்னை ஹரிகதா ரத்னகர ஸ்ரீ T. S. பாலகிருஷ்ண சாஸ்த்ரிகள் அவர்களால் பொன்னடை போர்த்தி '' குரு கைங்கர்ய மணி '' என்ற பட்டத்தையும் அளித்து கௌரவித்தார்.

*11—1—71* திங்கட்கிழமையன்று குமாரி R. பத்மினி பார்ட்டியார் அவர்களால் ஸ்ரீ ஆண்டாள் நடனம் மிகச் சிறப்பாக நடைபெற்றது. *12—1—71* செவ்வாய்கிழமையன்று



வேலூர் பாவை விழாவில்

ஸ்ரீ ஆண்டாள் நடனமாடிய

குமாரி R. பத்மினி

வேலூர் வருமானவரி ஆபிஸர் ஸ்ரீ C. S. சேதுராமன் M. A., அவர்களால் "இசையும் இறைவனும்" சொற்பொழிவு மிகச் சிறப்பாக நடைபெற்றது. ஸ்ரீ S. திருஞானசம்பந்தம் B. Com அவர்களின் குழுவின் இன்னிசைக் கச்சேரி மிகச் சிறப்பாக நடைபெற்றது. 13—1—71 புதன் அன்று ஸத்கதாம்ருத கலாநிதி, ஹரிகதா ரத்னுகர, தியாககானலோல சென்னை ஸ்ரீ T. S. பாலகிருஷ்ண சாஸ்திரிகள் அவர்களால் "ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள் சரித்திரம்" ஹரிகதா காலக்ஷேபம் மிகச் சிறப்பாக நடைபெற்றது. 14—1—71 வியாழன் அன்று வட ஆற்காடு ஜில்லா மாஜிஸ்டிரேட் ஸ்ரீ A. சோமசுந்தரம் B. Sc. B. L., அவர்களால் 'இறைவழிபாட்டின் இன்பம்' என்னும் பொருள்பற்றி சொற்பொழிவு நடைபெற்றது. திருவனந்தபுரம் சகோதரிகள் குழுவின் இன்னிசைக் கச்சேரி நடைபெற்றது. 15—1—71 அன்று ஸ்ரீமதி வனஜா வரதன் அவர்களின் இன்னிசை நிகழ்ச்சி நடைபெற்றது. ஸ்ரீமதி ஸரோஜா ஸ்ரீனிவாசன் குழுவினரின் இன்னிசைக் கச்சேரியும் நடைபெற்றது. 16—1—71 சனிக்கிழமையன்று ஸ்ரீ ஸத்குரு தியாகராஜ ஸ்வாமிகள் ஆராதனை மிகச் சிறப்பாக நடைபெற்றது. அதில் வேலூர்–காட்பாடி டவுன்ஷிப் மாதர் சங்க அங்கத்தினர்களின் பஞ்சரத்ன கீர்த்தனைகள் கோஷ்டிகானமும் பக்தர்களின் திவ்யநாம சங்கீர்த்தனமும் நடைபெற்றது. வேலூர், வேலப்பாடி சங்கீத வித்வான் திரு V. M. இராமமூர்த்தி விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்லமுறையில் நடத்திவைத்தார்கள்.

22 வேலூர்: 14—1—71, 15—1—71 ஆகிய தேதிகளில் வேலூர் அகத்தி கிருஷ்ணப்பசெட்டி வீதி வணிகவைசியர் கல்யாண மண்டபத்தில் திருப்பாவை — திருவெம்பாவை விழா மிகச்சிறப்பாக நடைபெற்றது. அதுசமயம் 14-1-71 வியாழக்கிழமையன்று வேலூர் மாவட்ட மாஜிஸ்டிரேட் திரு அ. சோமசுந்தரம் B. Sc. B. L., அவர்கள் முன்னிலையில் விழா துவங்கியது. திருமதி மோகன திரிபுரசுந்தரி அம்மையார் அவர்களால் கடவுள் வணக்கமும், விளக்கு பூஜையும் நடத்தப்பட்டது. மாவட்ட ஆட்சித்தலைவர் திரு V. ராமமூர்த்தி I. A. S., அவர்கள் தலைமைதாங்கி "ஸ்ரீ ஆண்டாளும் திருப்பாவையும்' என்பதுபற்றி சொற்பொழிவாற்றி விழாவை சிறப்பித்துவைத்தார்கள். திருமதி மகாலக்ஷ்மி ஸ்ரீராம் அவர்களால் பாட்டு தக்க பக்க வாத்தியங்களுடன் திருப்பாவை பக்திப் பாடல்கள் பாடப்பட்டது. திருமதி கமலா இராமமூர்த்தி அவர்கள் பாவைப் போட்டியில் கலந்துகொண்டு வெற்றிபெற்றவர்களுக்கு பரிசுகள் வழங்கினர். சென்னை ஸ்டுடியோ ஆசிரியை செல்வி T. சுப்புலக்ஷ்மி & பார்ட்டி பேபி தேவிகா, மஞ்சுளா, வள்ளி, உமா அவர்களின் திருப்பாவை பரதநாட்டியம் நடைபெற்றது. திரு எஸ். ராமஸ்வாமி அவர்களின் நன்றிநவிலலுடன் விழா இனிது முடிவடைந்தது. 15—1—71 வெள்ளிக்கிழமையன்று வருமானவரி அதிகாரி திரு C. S. சேதுராமன் M. A., அவர்கள் விழாவிற்குத் தலைமைதாங்கி ஸ்ரீ மாணிக்கவாசகரும் திருவெம்பாவையும் என்னும் பொருள்பற்றி சிறப்பு சொற்பொழிவாற்றினார்கள். திருமதி துரை ஜானகிராமன் அவர்கள் பாவைப் போட்டியில் வெற்றிபெற்ற மாணவ மாணவிகளுக்கு பரிசுகள் வழங்கினர். திரு S. திருஞானசம்பந்தம் B. Com. அவர்களின் குழுவின் திருவெம்பாவை இன்னிசைக் கச்சேரி மிகச் சிறப்பாக நடைபெற்றது. செல்வி ரூபமாலா, மல்லிகாவின் பரத நாட்டியம் நடைபெற்றது. திரு எஸ். ராமசாமி அவர்களின் நன்றி நவிலலுடன் விழா இனிது முடிவுற்றது. விழாக் குழுவினர் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்லமுறையில் நடத்திவைத்தார்கள்.

28 திருப்பனங்காடு: 17-1-71 ஞாயிற்றுக்கிழமையன்று வட ஆற்காடு ஜில்லா செய்யார் தாலுக்கா திருப்பனங்காடு கிராமத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ தாலபுரீஸ்வரர், கிருபாநாதீஸ்வரர் தேவஸ்தானத்தில் தெய்வீகப் பேரவையின்கீழ் துவங்கி இயங்கிவரும் பாலர் பாவை சங்கத்தின் பரிசளிப்பு விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. அதுசமயம்

திருப்பனங்காடு பஞ்சாயத்து தலைவர் ராமமூர்த்திநாயுடு அவர்கள் தலைமைவகித்து சிறப்புரை யாற்றினார்கள். சங்க ஆசிரியர் திரு N. தேவராஜன் அவர்கள் வரவேற்புரைகூறி சிறப்புரையும் கூறினார்கள். பெருங்கட்டூர் உயர்நிலைப்பள்ளி ஆசிரியர் புலவர் திரு இரா. சுப்ரமணியம் அவர்கள் "நின்றவூர் பூசலன்பன்" என்னும் தலைப்பிலும் வெம்பாக்கம் உயர்நிலைப்பள்ளி தலைமைத் தமிழாசிரியர் புலவர் திரு இரா. சங்கரன் அவர்கள் "கோதை தமிழ்" என்னும் தலைப்பிலும் பக்க இன்னிசைக் கருவிகளோடு சிறப்பு சொற்பொழிவாற்றினார்கள். அது சமயம் ஸ்ரீ பக்தவத்சல பெருமாள் ஆலய அறங்காவலர் திரு T. D. கண்ணப்ப முதலியார் அவர்களும், ஊர் கர்ணம் திரு நடேசப்பிள்ளை அவர்களும் பாவைப்பாடல்கள் பயின்ற சிறுவர்களுக்கு ஆசார்ய சுவாமிகள் அருள் பிரசாதம் வழங்கி ஆசியுரைகூறி அம்பாள் காசும் மற்ற பரிசுப்பொருள்களும் வழங்கினார்கள். பாலர் பாவை சங்கத் தலைவர் திரு T. D. லோகன் அவர்கள் நன்றி கூறினார்கள். தெய்வீகப் பேரவையின் செயலாளர் திரு C. V. இராஜு முதலியார், சங்கத்தலைவரும், கிராமப்பெரியோர்களும், விழாவிற்கு வேண்டிய எல்லா ஏழபாடுகளையும் செய்து விழாவை மிக நல்லமுறையில் நடத்திவைத்தார்கள்.

24 கலவை : 22—1—71ல் வட ஆற்காடு மாவட்டம் கலவை ஸ்ரீ கரிவரதராஜப் பெருமாள் தேவஸ்தானத்தில் திருப்பாவை — திருவெம்பாவை மாநாடு மிகச் சிறப்பாக நடைபெற்றது. அவ்வமயம் திரு வெங்கடேச பாகவதரும், ஆவணிபாபுரம் சின்னுப்பா பாகவதரும் ஷ பாவைகளின் பெருமைகளை இலக்கிய உபன்யாஸம் செய்து மகிழ்ச்சியாக நடத்தி பாவைப் பாசுரங்களை பாராயணம் செய்த குழந்தைகளுக்கு இனிப்பு வழங்கி விழா இனிது முடிந்தது. குழுத்தலைவர் திரு K. P. சஞ்சீவி முதலியார் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுதளையும் செய்து விழாவை நல்லமுறையில் நடத்திவைத்தார்கள்.

25 இராணிப்பேட்டை : 13—2—71 அன்று பாரி நகரில் திரு N. பர்வதராஜன் அவர்கள் முயற்சியால் திருப்பாவை — திருவெம்பாவை விழா இனிது நடைபெற்றது. அது சமயம் "திருப்பாவை நோன்பு" என்னும் நாடகம் குழந்தைகளால் நடத்தப்பட்டது. பாவைப் போட்டியில் கலந்து வெற்றிபெற்ற குழந்தைகளுக்கு ஸ்ரீ ஆச்சாரிய சுவாமிகள் பிரஸாதம், ஸ்ரீ அம்பாள் வெள்ளிக்காசுகள் வழங்கப்பட்டது.

26 தஞ்சாவூர் : 27–12–70 ஞாயிற்றுக்கிழமை மாலை 6 மணிக்கு மேல அலங்கம் ஸ்ரீ முருகன் ஆஸ்ரமத்தில் திருப்பாவை — திருவெம்பாவை விழா இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை உதவி ஆணையர் திரு R. அர்ஜுனன் B. A., அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. அதுசமயம் விவசாய வருமானவரி துணை ஆணையர் திரு P. துரைசாமி B. A., அவர்கள் "திருப்பாவையில் திருக்குறள்" என்ற பொருள்பற்றியும் திரு B. C. ரமணி B. Com., அவர்கள் "ஸ்ரீ மாணிக்கவாசகர்" என்ற பொருள்பற்றியும் மிகவும் அழகாக சொற்பொழிவாற்றினார்கள். பாவைப் பாடல்களில் பரிசுபெறும் குழந்தைகளுக்கு திருமதி பங்கஜம்தாஸ் அவர்கள் பரிசுகளை வழங்கினார்கள். திரு T. P. கோவிந்தஸ்வாமி R. I. M. P. விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்லமுறையில் நடத்திவைத்தார்கள்.

27 பாவநாசம் : 30—12—70 புதன்கிழமை யன்று ஸ்ரீ பாவநாச சுவாமி தேவஸ்தானத்தில் பாவை மாநாடு சிங்கம்பட்டி ஜமீன்தார் உயர்திரு T N. S. முருகதாஸ் தீர்த்தபதி அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. அதுசமயம் அம்பை அறநிலைய ஆட்சித்துறை சமயப் பரப்புனர் திரு தே. ம. பூதலிங்கம் அவர்கள் "பாவை காட்டும் பாதை" என்னும் பொருள்பற்றியும், திருவாவடுதுறை ஆதீனம் சமய பிரச்சாரகர் அம்பை சித்தாந்தமணி திரு ஆ. முத்துக்குமாரசாமி பிள்ளை "திருவெம்பாவை" என்னும் பொருள்

பற்றியும் அழகாகச் சொற்பொழிவாற்றினர்கள். பாவைப்போட்டிகளில் வெற்றிப்பெற்ற குழந்தைகளுக்குப் பரிசுகள் வழங்கப்பட்டது. இரவு 8 மணிக்கு மாயூரம் ஸ்ரீ கணநாதர் பொம்மலாட்ட நாடக சபாவினரின் "ஸ்ரீ மாணிக்கவாசகர் சரித்திரம்" என்ற பொம்மலாட்ட நாடகம் நடைபெற்றது. நிர்வாக அதிகாரி திரு K. ஏகாம்பரநாதன் B. A., அவர்கள் விழாவிற்குவேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை நல்லமுறையில் நடத்திவைத்தார்.

28 கச்சனம் : 2—1—71 சனிக்கிழமையன்று மதுரை ஆதீனத்தைச் சேர்ந்த ஸ்ரீ கச்சனேஸ்வர சுவாமி திருக்கோயிலில் திருப்பாவை-திருவெம்பாவை விழா மதுரை ஆதீனம் குரு மகா சன்னிதானம் ஸ்ரீ—ல—ஸ்ரீ சோமசுந்தர ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள் தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. பழனி 'இன்னிசைக் கவிமணி' திரு இளங்கம்பன் அவர்கள் 'திருப்பாவை' என்னும் பொருள் பற்றி அழகாகச் சொற்பொழிவாற்றினர்கள். பாவைப்போட்டியில் கலந்துக்கொண்டு வெற்றிபெற்ற குழந்தைகளுக்குப் பரிசுகள் வழங்கப்பட்டது. தலைவர் முடிவுரைக்குப்பின் விழா இனிது முடிவடைந்தது. ஷை ஆலய நிர்வாக அதிகாரி திரு P. நெல்லையப்பன் பி. ஏ , அவர்கள் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்திவைத்தார்.

29 தஞ்சை : 7—1—71 & 10—1—71 தேதிகளில் அரண்மனை தேவஸ்தானம் ஸ்ரீ பிரகதீஸ்வரஸ்வாமி கோயிலில் திருப்பாவை–திருவெம்பாவை விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. 7—1—71 ல் நடந்த விழாவில் தஞ்சை அரண்மனை தேவஸ்தானம் பரம்பரை அறங்காவலர் ராஜஸ்ரீ ராஜாராம் ராஜா சாகேப் அவர்கள் வரவேற்புரை வழங்கினர், சென்னை இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை ஆணையர் திரு K. S. நரசிம்மன் B. A. B. L., I, A. S. அவர்கள் தலைமைதாங்கி விழாவைச் சிறப்பித்தார்கள். மேலும் பூண்டி, புஷ்பங் கல்லூரி பேராசிரியர் திரு தி. கோதண்டபாணி M. A. B. O. L., கரந்தை புலவர் கல்லூரி புலவர் திரு ச. பாலசுந்தரம் பேராசிரியர் ஆகியோர் அழகாகச் சொற்பொழிவாற்றினர்கள். பாவை போட்டியில் வெற்றி பெற்ற குழந்தைகளுக்கு பரிசுகள் வழங்கினர்கள். பரிசு பெற்ற குழந்தை காமாக்ஷி 'அப்பர் தொண்டு' என்னும் பொருள் பற்றி அழகாகப் பேசியது குறிப்பிடத்தக்கது.

10–1—71 ல் நடைபெற்ற விழாவில் தஞ்சை அரண்மனை தேவஸ்தானம் பரம்பரை அறங்காவலர் ராஜஸ்ரீ ராஜாராம் ராஜா சாகேப் தலைமை தாங்கினர்கள். மேலும் பண்டித சிரோமணி திரு A. S. ரெங்கநாதசாரியார் அவர்கள் அழகாகச் சொற்பொழிவாற்றினர்கள். பிளேக் உயர்நிலைப்பள்ளி ஆசிரியர் புலவர் திரு A. தக்ஷிணாமூர்த்தி 'மாணிக்கவாசகர்' என்னும் பொருள் பற்றியும், புலவர் திரு வேல்சம்பந்தமூர்த்தி 'இருப்பாவைகள்' என்னும் பொருள் பற்றியும் பண்டித சிரோன்மணி திரு N. S. தாதாசாரியார் அவர்கள் 'பாவை நோம்பு" என்னும் பொருள் பற்றியும் அழகாக சொற்பொழிவாற்றினர்கள். நன்றி நவிலலுடன் விழா இனிது முடிவடைந்தது. தஞ்சை அரண்மனை தேவஸ்தான பரம்பரை அறங்காவலர் ராஜஸ்ரீ ராஜாராம் ராஜா சாகேப் அவர்களும் மேலாளர் திரு A. N. பார்த்தசாரதி B. Sc., அவர்களும் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்தி வைத்தார்கள்.

30 தஞ்சை : 11—1—71 திங்கட்கிழமையன்று தஞ்சை குறிச்சித்தெரு கீழவாசல் கந்தன் செந்தமிழ் கழகத்தின் சார்பில் 'திருப்பாவை – திருவெம்பாவை' மகாநாடு குறிச்சித்தெரு ஸ்ரீ சுப்பிரமணியர் ஆலயத்தில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. அவ்வமயம் தஞ்சை ஸரஸ்வதி மஹால் தமிழ்த்துறை ஆய்வாளர் புலவர் திரு வீ. சொக்கலிங்கம் அவர்கள் தலைமைத் தாங்கி விழாவைச் சிறப்பித்து வைத்தார்கள். தஞ்சை மாவட்ட முப்படை வீரர்கழகம்

உதவி காரியதரிசி திரு இரா. சந்தானம் அவர்கள் விழாவில் கலந்துக்கொண்டு விழாவைச் சிறப்பித்து வைத்தார்கள். தஞ்சை பாத்திர வியாபாரம் திரு ப. சி. அண்ணாமலைநாடார் அவர்கள் விழாவை துவக்கி வைத்தார்கள். தஞ்சை வீரராகவ உயர்நிலைப்பள்ளி தமிழாசிரியர் புலவர் திரு வேல் சம்பந்தமூர்த்தி அவர்கள் 'நீங்காத செல்வம் நிறைந்தது' என்னும் பொருள் பற்றியும், தஞ்சை தூய அந்தோனியர் உயர்நிலைப்பள்ளி தமிழாசிரியர் புலவர் திரு ப. சங்கரன் அவர்கள் '' எய்யாமற் காப்பாய் எம்மை ' என்னும் பொருள் பற்றியும் அழகாகச் சொற்பொழிவாற்றினர்கள். திரு மு. கணபதியாப்பிள்ளை விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிகவும் நல்லமுறையில் நடத்தி வைத்தார்கள்.

31 கம்பம்: *11—1—71* திங்கட்கிழமை யன்று ஸ்ரீ கம்பராயப் பெருமாள் & ஸ்ரீ காசிவிஸ்வநாதசுவாமி தேவஸ்தானத்தில் திருப்பாவை—திருவெம்பாவைமாநாடு உத்தமபாளையம் சப்-மாஜிஸ்திரேட் உயர்திரு M. காமாக்ஷி B. Com , B. L ,அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. சமயப்பிரசாரகர் திரு C. சுப்பிரமணியம் அவர்கள் 'திருப்பாவை' என்னும் பொருள்பற்றியும், 'சன்மார்க்க நன்மணி' திரு K. பொன்னையா அவர்கள் ( ஆசிரியர் சின்னமனூர் ) '' திருவெம்பாவை '' என்னும் பொருள்பற்றியும், 'இன்னிசைக் கவிமணி' திரு இளங்கம்பன் அவர்கள் '' இருபாவைகள் '' என்னும் பொருள்பற்றியும், சொற்பொழிவாற்றினர்கள். ஓய்வுபெற்ற ஆசிரியர் திரு சுப்பையாபிள்ளை, அவர்கள் பாவைப்பாடல் போட்டியில் வெற்றிபெற்ற குழந்தைகளுக்குப் பரிசுகள் வழங்கினர். நிர்வாக அதிகாரி திரு க. சொக்கலிங்கம் பி. ஏ., அவர்கள் நன்றிகூற விழா இனிது முடிந்தது. நிர்வாக அதிகாரி திரு க. சொக்கலிங்கம் பி. ஏ., அவர்கள் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை நல்லமுறையில் நடத்திவைத்தார்கள்.

32 திருக்கோவலூர்: *11-—1—71* திங்கட்கிழமை சேவக சங்க மாணவர் விடுதியில் 22-ம் ஆண்டு நம்பாவைகள் சிறப்புக் கூட்டம் நடைபெற்றது. அவ்வமயம் மாவட்ட நல அதிகாரி திரு சி. நம்பி அவர்கள் விழாவிற்குத் தலைமைதாங்கி விழாவைச் சிறப்பித்து வைத்தார்கள். திருக்கோவலூர் அரசினர் உயர்நிலைப்பள்ளி முதல்நிலை தமிழ் ஆசிரியர் வித்வான் திரு மு. நடேசன் அவர்கள் '' இருபாவைகள் '' என்னும் பொருள்பற்றி அழகாக சொற்பொழிவாற்றினர்கள். விடுதி மாணவர்களுக்கு தலைவர் சி. நம்பி அவர்கள் புத்தாடை வழங்கினர்கள். திரு நா. ஜெயராமன் அவர்கள் வந்தனோபசாரம் கூற விழா இனிது முடிவுற்றது. பாவைப்பாடல்களை மனப்பாடம் செய்து ஒப்புவித்த குழந்தைகளுக்கு ஸ்ரீ ஆச்சார்ய சுவாமிகள் அருளிய பிரசாதம், வெள்ளிக்காசுகள் வழங்கப்பட்டது. சேவக சங்க மாணவர் விடுதி காரியதரிசி திரு கோ. இராமசாமி நாயக்கர் அவர்கள் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்லமுறையில் நடத்திவைத்தார்கள்.

33 கரந்தை: *13-1-71* புதன்கிழமை யன்று (தஞ்சை-2) ஸ்ரீ மீனாட்சிசுந்தரேசுவர் கோயிலில் கரந்தைச் சைவப் பிரசார சபை சார்பில் திருப்பாவை—திருவெம்பாவை மாநாடு மிகச் சிறப்பாக நடைபெற்றது. அதுசமயம் கரந்தை சிவப்பெருந்தொண்டர் உயர்திரு கு. ராசமாணிக்கம் செட்டியார் அவர்கள் தலைமைதாங்கி விழாவைச் சிறப்பித்து வைத்தார்கள். K. H. S. தமிழ் ஆசிரியர், தலைவர் பிரசாரசபை, புலவர் திரு கு. சின்னையன் அவர்கள் '' பாவை '' என்னும் பொருள்பற்றியும் '' மணிவாசகப்பெருந்தகை '' பேராவூர் திரு அரங்கநாதன் அவர்களால் '' ஆண்டாள் திருக்கல்யாணம் '' என்னும் பொருள்பற்றியும் அழகாகச் சொற்பொழிவாற்றினர்கள். பாவைப்பாடல் போட்டியில் வெற்றிபெற்ற குழந்தைகளுக்கு ஸ்ரீ ஆச்சாரிய சுவாமிகள் அனுக்கிரஹித்த பிரசாதமும், ஸ்ரீ அம்பாள் வெள்ளிக் காசுகளும்

வழங்கப்பட்டது. நன்றி நவிலலுடன் விழா இனிது முடிவடைந்தது. செயலாளர் திரு பா. கேசவன் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிகவும் நல்ல முறையில் நடத்திவைத்தார்கள்.

84 தஞ்சை-மகர்நோம்புச்சாவடி : 20—1-71 புதன்கிழமையன்று சௌராஷ்டிரா மேல ராஜவீதியில் அமைந்துள்ள (பரம்பரை டிரஸ்டி & டிரஸ்டிகளின் நிர்வாகத்தில் உட்பட்ட) ஸ்ரீ வேணுகோபாலஸ்வாமி மடத்தில் பாவைவிழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. அது சமயம் சௌராஷ்டிர சன்மார்க்க சபா தலைவர் பஜ்ஜி திரு கு. ரெங்கையர் அவர்கள் விழாவிற்குத் தலைமைதாங்கி விழாவைச் சிறப்பித்து வைத்தார்கள். உயர்திரு G. சுவாமி நாதன் M. L, C. அவர்கள், உயர்திரு T. N. ராமச்சந்திரன் B. Com., B. L., அவர்கள், புலவர் உயர்திரு B. ராஜேந்திரன் அவர்கள் மற்றும் பலர் சொற்பொழிவாற்றி விழாவைச் சிறப்பித்துவைத்தார்கள். கிருஷ்ணாடெக்ஸ்டைல் உயர் திரு M. N. சக்கரபாணி அய்யர் அவர்கள் ஸ்ரீ காஞ்சி காமகோடி ஸ்ரீ ஆச்சார்ய ஸ்வாமிகள் அனுக்கிரஹித்த ஸ்ரீ அம்பாள் வெள்ளிக்காசுகளை பாவைப்பாடல் போட்டியில் வெற்றிபெற்ற சிறுவர்களுக்கு வழங்கினர். K. L. நாகையர் & சன்ஸ் உரிமையாளர் உயர்திரு K. N. குப்புராமன் அவர்கள் பாவைப் போட்டியில் வெற்றிபெற்ற மாணவ மாணவியர்களுக்கு பரிசுகளும், பாவை ஆசிரியர் திரு B. N. நாகராஜ பாகவதர் அவர்களுக்கு சன்மானமும் வழங்கினர். பாவை கமிட்டியார் திரு B N. நாகராஜ பாகவதர், திரு S, R. குணசுந்தரம், திரு K. R கிருஷ்ணமூர்த்தி ஆகியோர் விழா விற்குவேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்லமுறையில் நடத்தி வைத்தார்கள்.

85 திருவையாறு : 25—1—71 அன்று ஸ்ரீ பாலகணபதி வித்யாசாலாவில் திருப் பாவை — திருவெம்பாவை விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. சென்னை 21 முருகன் அடியார் நிலையத்தார் அன்புடன் அளித்த 2 குரோஸ் பென்சில்களையும், உள்ளூரன்பர் உதவிய சிலேட்டுக்குச்சிகளையும் குழந்தைகளுக்கு வழங்கப்பட்டது. திரு V. ராஜகோபால அய்யர் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்திவைத்தார்கள்.

86 தஞ்சை : 29-1-71 வெள்ளிக்கிழமையன்று ஸ்ரீ பங்காருகாமாக்ஷியம்மன்தேவஸ் தானத்தின் ஆதரவில் வசந்த மண்டபத்தில் திருப்பாவை-திருவெம்பாவை மாநாடு தஞ்சை இந்து சமயஅறநிலைய பாதுகாப்பு இலாகா துணை ஆணையர் உயர்திரு V. S. கோதண்டபாணி B. Sc., B. L., அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது; அவ்வமயம் தலைமை அறங்காவலர் ஸ்ரீ R. சுவாமிநாதன் அவர்கள் வரவேப்புரை வழங்கினர். பாவைப்போட்டியில் கலந்துகொண்டு வெற்றிபெற்ற குழந்தைகளுக்கு தலைவர் உயர்திரு V. S. கோதண்டபாணி B. Sc., B L., அவர்கள் பரிசுகள் வழங்கினர்கள். அறங்காவலர் திரு T. N. ராமச்சந்திரன் B Com . B. L., தஞ்சை அசிஸ்டெண்ட் செட்டில்மெண்டு ஆபீசர் திரு M. கிருஷ்ணன், திரு N. S. தாத்தாசாரியார் ஆகியோர்களுடைய சொற்பொழிவு மிகவும் சிறப்பாக நடை பெற்றது. மேலும் திருச்செந்தூர் செஞ்சொற்கொண்டல் வித்துவான் திரு பா. சந்திர சேகரன் பிள்ளை அவர்கள் "கண்ணுக்கினியாள்" என்னும் பொருள்பற்றி அழகாகச் சொற்பொழிவாற்றினர்கள். நன்றி நவிலலுடன் விழா இனிது முடிவடைந்தது. மேலாளர் திரு. V, K. கண்ணபிரான் B. A, தலைமை அறங்காவலர் திரு R. சுவாமிநாதன், அறங் காவலர்கள் திரு T. N. ராமச்சந்திரன் B. Com., B. L, திரு J. சேதுராமன் G. C. I. M. ஆகியோரும் ஸ்தானீக அறங்காவலர்கள் திரு T V. சீனிவாசசாஸ்திரி, திருR. சுந்தர சாஸ்திரி ஆகியோர்கள் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை நல்ல முறையில் நடத்திவைத்தார்கள்.

37 தஞ்சாவூர் : 31—1—71 ஞாயிற்றுக்கிழமை யன்று அரண்மனை இலாகா தேவஸ்தானம் புன்னைநல்லூர் ஸ்ரீ மாரியம்மன் கோவிலில் நடைபெற்ற திருப்பாவை — திருவெம்பாவை விழாவில் தஞ்சை அறநிலைய ஆட்சித்துறை துணை ஆணையர் உயர்திரு V. S. கோதண்டபாணி B. Sc , B. L., அவர்கள் தலைமை தாங்கி விழாவைச் சிறப்பித்துவைத்தார்கள். அதுசமயம் தஞ்சைமாவட்ட முதன்மைக் கல்வி அதிகாரி திருமதி விசாலாக்ஷி அம்மாள் B. Sc., L. T., அவர்கள் விழாவைத் துவக்கிவைத்தார்கள். அவ்வமயம் தஞ்சை " ஹரிகதா மணி " குமாரி R. சௌதாமினி அவர்கள் " மணிவாசகரும் — மணிவாசகமும் " என்னும் பொருள்பற்றியும், தஞ்சை " ஹரிகதாப்ரவீண் " குமாரி R. லலிதாம்பாள் அவர்கள் " ஆண்டாளும் திருப்பாவை " யும் என்னும் பொருள்பற்றியும், தஞ்சை " உபாகித்யாலங்கார " திருப்பணித் திலகம் பாவை பிரசாரமணி பண்டித சிரோமணி ஸ்ரீ உ. ப. வே. ரங்கனாதாச்சாரியார் சுவாமி அவர்கள் " இரு பாவைகள் " என்பதுபற்றியும் அழகாக சொற்பொழிவாற்றினர்கள். பாவைப்போட்டியில் வெற்றிபெற்ற சிறுவர் சிறுமிகளுக்கு தஞ்சை அரண்மனை இலாக்கா தேவஸ்தான பரம்பரை தர்மகர்த்தா ஸ்ரீ ராஜஸ்ரீ ராஜாராம் ராஜா சத்ரபதி அவர்கள் பரிசுகள் வழங்கினர்கள். நன்றி நவிலலுடன் விழா இனிது முடிவடைந்தது. ஷை ஆலய ஸ்தானிகம் & ஸ்ரீ S. K. A. கணேசகுருக்கள் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்லமுறையில் நடத்திவைத்தார்கள்.

38 தஞ்சாவூர் : 5—2—71 வெள்ளிக்கிழமையன்று மேலராஜவீதி, ஸ்ரீ சங்கர மடத்தில் நடைபெற்றுவரும் தஞ்சை ஓரியண்டல் ஸ்கூலில் திருப்பாவை — திருவெம்பாவை மாநாடு தஞ்சாவூர் " பார்ம் பிராடக்ட்ஸ் " திரு ஜி. சுவாமிநாதன் M. L. C. அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. பரிசுப்போட்டியில் வெற்றிபெற்ற மாணவ—மாணவியரது பாட்டு, பேச்சு நிகழ்ச்சி இடம்பெற்றது. திருமதி விஜயலட்சுமி சுவாமிநாதன் அவர்கள் மாணவ — மாணவியருக்கு பரிசுவழங்கினர். ஓரியண்டல் ஸ்கூல் தலைவர் திரு V. நடராஜன் B. A. F. C., A Chartered Acct., காரியதரிசி திரு S. V. ஸந்தான ராமன், தலைமை ஆசிரியர் திரு A. S. ஜயராமன் B. A.. B. T. ஆசிரியர்கள், மாணவர்கள் விழாவிற்குவேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்லமுறையில் நடத்திவைத்தார்கள்.

39 அம்மாபேட்டை ; 10—2—71 புதன்கிழமையன்று உக்கடை திரு A. அப்பாவு தேவர் உயர்நிலைப் பள்ளிக் கட்டிடத்தில் அம்மாபேட்டை திருப்பாவை – திருவெம்பாவை சங்கத்தின் சார்பில் திருப்பாவை—திருவெம்பாவை மாநாடு தஞ்சை. முதன்மைக் கல்வி அலுவலர் திருமதி C. விசாலாக்ஷி B. Sc., L. T. அவர்கள் தலைமைத் தாங்கி விழாவைச் சிறப்பித்து வைத்தார்கள். அவ்வமயம் தஞ்சை மாவட்ட கலெக்டரின் நேர் உதவியாளர் (தேர்தல்) திரு பொ. துரைசாமி B. A.. அவர்கள் " திருப்பாவையில் திருக்குறள் " என்பது பற்றியும் கரந்தை கல்லூரி புலவர் விரிவுரையாளர் பேராசிரியர் புலவர் திரு சி. கோவிந்தராசனர் அவர்கள் ' திருவெம்பாவை ' என்பது பற்றியும் அழகாகச் சொற்பொழிவாற்றினர்கள். பாவைப் போட்டியில் வெற்றிப்பெற்ற குழந்தைகளுக்கு பரிசுகள் வழங்கப்பட்டது. நன்றி நவிலலுடன் விழா இனிது முடிவடைந்தது. திருப்பாவை திருவெம்பாவை சங்கத்தலைவர் திரு A. அப்பாவுத்தேவர் அவர்கள் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்லமுறையில் நடத்திவைத்தார்கள்.

40 தஞ்சை : 22—2—71 திங்கட்கிழமையன்று மேலவிதி உக்கடை ஸ்ரீ அம்பாள் பெண்கள் உயர்நிலைப்பள்ளி கட்டிடத்தில் திருப்பாவை திருவெம்பாவை சங்கத்தின் சார்பில் திருப்பாவை–திருவெம்பாவை விழா உயர்திரு A. அப்பாவுத்தேவர் அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. தலைவரவர்கள் பாவைப்போட்டியில் கலந்துக்கொண்டு வெற்றிப்பெற்ற குழந்தைகளுக்குப் பரிசுகள் வழங்கினர்கள். அதுபோது பூண்டி

திருபுஷ்பம் கல்லூரி துணை பேராசிரியர் திரு K. கோதண்டபாணி M. A.B, O. L., பூண்டி, திருபுஷ்பம் கல்லூரி விரிவுரையாளர் திரு G. R. கிருஷ்ண மூர்த்தி M. A. B. T. ஆகிய இருவரும் சிறப்பு சொற்பொழிவாற்றினர்கள். திருப்பாவை-திருவெம்பாவை விழாக் கமிட்டியார் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்திவைத்தார்கள்.

41 திருச்சி: 16—12—70 புதன்கிழமையன்று சின்னசெட்டித் தெரு திருமதி அம்மாக்கண்ணு அம்மையார் திருமண மாளிகையில் திருச்சி திருகச்சிநம்பிஸபையின் சார்பில் திருப்பாவை காலக்ஷேபம் ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம் ஆசிரியர் ஸ்ரீ உ, வே. S. கிருஷ்ணசாமி ஐயங்கார் M. A. B. L. அவர்கள் தலைமையில் உபன்யாச ரத்னம் திவ்ய பிரபந்த திவாகரர் திருப்பாவை மணி விளக்கு வித்வான் ஸ்ரீ உ. வே S. ராமஸ்வாமி அய்யங்கார் B, A. L. T., என்கிற ஸ்ரீரங்கம் கண்ணன் ஸ்வாமிகள் அவர்களால் அதிவிமரிசையாக நடைபெற்றது. சங்கத் தலைவர் திரு K. P. S. சுந்தரராஜன் செட்டியார் அவர்களும் சங்கக்காரியதரிசி "ஸேவா ரத்னம்" திரு M. R. கண்ணபிரான் நாயுடு அவர்களும் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்திவைத்தார்கள்.

42 திருச்சிமாவட்டம், புதுபட்டி: 20—2—70 ஞாயிற்றுக்கிழமையன்று நகரச் சிவன் கோவிலில் வார வழிப்பாட்டுக் கழகத்தின் 17 வது ஆண்டு திருப்பாவை திருவெம்பாவை விழா மிகச்சிறப்பாக நடைபெற்றது. அதுசமயம் இளையாத்தங்குடி சிவா அர்ச்சக பாஸ்கர பாகவத ரத்னம், வேத ஆகம சாஸ்த்ர விற்பன்ன தமிழ் அருட்பிரவாக திரு ப. சதாசிவக்குருக்கள் அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கி விழாவைச் சிறப்பித்து வைத்தார்கள். அவ்வமயம் கண்டரமாணிக்கம் வித்வான் திரு நா. அனந்தகிருஷ்ணய்யங்கார் அவர்கள் "பாவை காட்டிய பாதை" என்னும் பொருள் பற்றியும் அழகாக சொற்பொழி வாற்றினர்கள். திருமயம் அரசு உயர்நிலைப்பள்ளி புலவர் திரு மு. விஸ்வநாதன் அவர்கள் சிறப்பு சொற்பொழிவாற்றினர்கள். நன்றி நவிலலுடன் விழா இனிது முடிவடைந்தது. வார வழிப்பாட்டுக் கழகச் செயலாளர் திரு A. விஸ்வநாதமுதலியார் அவர்கள் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்தி வைத்தார்கள்,

43 பொன்மலை: 30—12—70 to 4—1—71 முடிய ஸ்ரீ சங்கர ஸமாஜத்தின் சார்பில் திருப்பாவை—திருவெம்பாவை சிறப்பு சொற்பொழிவு வித்வான் சுப. சுப்பையன் M. A., அவர்களால் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. 30—12—70 புதன்கிழமையன்று முதல் 1—1—71 முடிய கீழ்க்கண்ட தலைப்புகளில் திருப்பாவை சொற்பொழிவு நடத்தப் பட்டது. "அன்பர்களே வாருங்கள்" "பாவை நோன்பு" "சேவை செய்ய அருள்வாய்" 2—1—71 சனிமுதல் 4—1—71 திங்கள் முடிய திருவெம்பாவை சொற்பொழிவு. அதாவது "இன்னுமா உறக்கம்" "நீராட வாருங்கள்" "உனக்கே அடைக்கலம்?" ஆகிய பொருள்கள் பற்றி. காரியதரிசி திரு R. வேம்பன் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவைமிக நல்ல முறையில் நடத்தி வைத்தார்கள்.

44 லால்குடி: 3—1—71 ஞாயிற்றுக்கிழமையன்று நன்னிமங்கலம் சென்னிவளநாடு ஸ்ரீ சுந்தரேஸ்வரஸ்வாமி & லக்ஷ்மிநாராயணப் பெருமாள் தேவஸ்தானத்தில் திருப்பாவை-திருவெம்பாவை மூன்ருவது விழா மிகச்சிறப்பாக நடைபெற்றது. அதுசமயம்

லால்குடி இந்துமத அறநிலைய நிர்வாகத்துறை ஆய்வர் திரு து. வரதராஜன் அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கி விழாவை சிறப்பித்து வைத்தார்கள். T. T. C. தமிழ்ப்பேரா சிரியர் முத்தமிழ் வள்ளல் இலஞ்சி அ. கி. முத்துக்குமாரசாமி B. A. Hons.. அவர்கள் "பாவை மாண்பு' என்னும் பொருள்பற்றி அழகாகச் சொற்பொழிவாற்றினர்கள். பாவை பாடல் போட்டியில் வெற்றிப்பெற்ற குழந்தைகளுக்கு பரிசுகள் வழங்கப்பட்டது. நன்றி நவிலலுடன் விழா இனிது முடிவடைந்தது. டிரஸ்டி திரு N. V. கிருஷ்ணமூர்த்தி விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்தி வைத்தார்கள்.

45 குளித்தலை : 3-1-71 ஞாயிற்றுக்கிழமையன்று திருப்பாவை-திருவெம்பாவை மாநாடு ஸ்ரீ நீலமேகப் பெருமாள் கோவிலில் குளித்தலை பர்மாஷெல் ஏஜண்ட் அறங்காவலர் குழுத்தலைவர் உயர்திரு K. M. U. நாகமாணிக்கஞ் செட்டியார் அவர்கள் தலைமையில் திரு முறை நகர்வலம் மாலை 2 மணியளவில் முருகனடி வில்லிசைக் குழுவினர்களால் "ஆண்டாள் வைபவம்" என்ற சரித்திரம் வில்லிசை. மாலை 3 மணிக்கு குளித்தலை தாசில்தார் உயர்திரு மு. கருப்பண்ணன் B. A. அவர்கள் சிரியத்தலைமையில் மிகச் சிறப்பாகச் சிறுவன் சி. இரவிச் சந்திரன் மழலைச் சொற்களில் இறைவணக்கம்பாடி குளித்தலை அட்வகேட் உயர்திரு ஆர். வி. ரங்கா பி. ஏ., பி. எல்., அவர்கள் அறங்காவலர் வரவேற்புரையும் 4—30 மணிக்கு உயர்திரு விக்யா ரத்னகர, ஸாஹித்ய ரத்னம், வித்யாவாசஸ்பதி குருவர்ய நாச்சியார்கோவில் பண்டித ஸ்ரீ நடாதூர் ஸ்வாமி ராகவாசாரியர் அவர்கள் திருப்பாவையும், தஞ்சை மாவட்டம் அம்மை யப்பன் அரசினர் உயர்நிலைப்பள்ளி தலைமைத் தமிழாசிரியர் திரு வித்வான் இராச. குஞ்சித பாதம் அவர்களும் குளித்தலை ஊராட்சி ஒன்றிய நடுநிலைப்பள்ளி ஆசிரியர் அவர்கள் திரு எம். பெரியசாமி அவர்களும் "திருவெம்பாவை" சொற்பொழிவும், பாவைப் போட்டியில் கலந்துக்கொண்ட மாணவ- மாணவிகளுக்கு குளித்தலை வட்ட ஆய்வாளர் உயர்திரு கு. வீரய்யா அவர்கள் ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகள் பிரஸாதமும் ஸ்ரீ அம்பாள் வெள்ளிகாசுகளும் குளித்தலை ஸ்ரீ நீலமேகப் பெருமாள் தேவஸ்த்தானதாரால் சன்மானமாக வழங்கப்பட்ட எவர்சில்வர் சந்தனக்கும்பாக்களும் பரிசுகள் வழங்கினர். ஆச்சார்ய சுவாமிகளின் ஆசிச்



குளித்தலை
ஸ்ரீ நீலமேகப்பெருமாள்
கோயிலில்
நடைபெற்ற பாவை விழா.



குளித்தலை

ஸ்ரீ நீலமேகப்பெருமாள் கோயில்

பாவை கலா நிகழ்ச்சியில்

பங்குகொண்ட மாணவி.

செய்திகளும் வழங்கப்பட்டது. ஜெயா. சாந்தா, இரத்தினம்பாள் குழுவினரின் பாவை பாசுரங்களுக்கு அபினயத்தின் மூல்யமாக வெகு சிறப்பாக நடைபெற்றது. நிர்வாகி திரு A. முருகேசம் பிள்ளை விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து கொடுத்து விழாவை மிக நல்லமுறையில் நடத்தி வைத்தார்கள். நன்றி நவிலலுடன் விழா இனிது முடிவடைந்தது.

46 திருச்சி ஜில்லா —லால்குடி : 3-1-71 ஞாயிற்றுக்கிழமையன்று ஸ்ரீ சப்தரிஷீஸ்வரர் திருக்கோயில் திருப்பாவை— திருவெம்பாவை விழா பூவாளூர் உயர்திரு மு. சுப்ரமண்யன் செட்டியார் அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. அதுபோழ்து உயர்திரு சோ. சத்தியசிலன் எம். ஏ., அவர்கள் 'திருப்பாவை' குறித்தும் உயர்திரு கு. திருமேனி எம். ஏ., அவர்கள் "திருவெம்பாவை" என்னும் பொருள் பற்றியும் அழகாகச் சொற்பொழிவாற்றினர்கள். திருச்சி திரு V. பாபுகோபால் அவர்களும் விழாவிற்கு வந்திருந்து ஸ்ரீ ஆசார்ய சுவாமிகள் ஆசிச்செய்தியை வாசித்தும், பிரசாதம் கொடுத்தும் தேர்வில் கலந்து கொண்ட மாணவ மாணவிகளுக்கு வெள்ளிக்காசுகளும் பரிசாக அளித்தார்கள். நிர்வாக அதிகாரி திரு S. துரைராஜன் அவர்களும் நிர்வாக அறங்காவலர் திரு N. சேதுராமன், அறங்காவலர்கள் திரு C. A. P. சம்பந்தம் பி. ஏ, திரு V. திருவன் ஆகியோர் விழாவிற்கான ஏற்பாடுகளைச் செய்து விழாவை மிக நல்லமுறையில் நடத்தி வைத்தார்கள்.

47 சமயபுரம் : 4—1—71 திங்கட்கிழமையன்று ஸ்ரீரங்கம் ஸ்ரீ ரங்கநாத ஸ்வாமி வகையறு தேவஸ்தானத்தைச் சேர்ந்த சமயபுரம் ஸ்ரீ மாரியம்மன் கோயிலில் திருப்பாவை திருவெம்பாவை மாநாடு கோவை இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை துணை ஆணையர் உயர்திரு P. R. பக்கிரிசங்கர் M. A. B. L, அவர்கள் சீரிய தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. அதுசமயம் திருச்சி இந்துசமய அறநிலைய ஆட்சித்துறை உதவி ஆணையர் திரு N. சீனிவாசன் B. A. B. L., அவர்கள் விழாவில் கலந்து கொண்டு விழாவை சிறப்பித்தார்கள், நெல்லை திரு சடகோபாசாரியார் அவர்கள் "திருப்பாவை" என்னும் பொருள் பற்றியும் திருமுறைச்செல்வர் புலவர் திரு மு. கணபதி அவர்கள் "திருவெம்பாவை" என்னும் பொருள் பற்றியும் அழகாகச் சொற்பொழிவாற்றினர்கள். பாவை போட்டியில் வெற்றிபெற்ற மாணவ மாணவிகளுக்கு பரிசுகள் வழங்கப்பட்டது. நன்றி நவிலலுடன் விழா இனிது முடிவடைந்தது. நிர்வாக அதிகாரி திரு V. முருகன், தர்மகர்த்தா குழுத்தலைவர்

திரு க. ராசவேலு M. A. B, L., தர்மகர்த்தாக்கள் திரு R. S. கிருஷ்ணராவ் B. A. B. L., திரு P. வடவேங்கடகோனர், திரு R. வரதாராஜ அய்யங்கார், ஸ்லத்தார் தர்மகர்த்தா வேத வியாஸ ஸ்ரீ. ராமபட்டர் சுவாமிகள் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளைவும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்திவைத்தார்கள்.

48 திருச்சி மாவட்டம்-திருநாராயணபுரம்: 8-1-71 வெள்ளிக்கிழமையன்று ஸ்ரீ வேத நாராயணப்பெருமாள் ஆலயத்தில் திருப்பாவை-திருவெம்பாவைமாநாடு கோவை இந்துசமய அறநிலைய ஆட்சித்துறை துணை ஆணையர் உயர்திரு P. R. பக்கிரிசங்கர், M. A. B. L., அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. அதுசமயம் திருச்சி இந்துசமய அறநிலைய ஆட்சித்துறை உதவி ஆணையர் உயர்திரு N. சீனிவாசன் B. A. B. L, அவர்கள் விழாவில் கலந்துக்கொண்டு விழாவைச்சிறப்பித்து வைத்தார்கள். அவ்வமயம் திருச்சி திரு சோ. சத்திய சீலன் M. A. B. T., அவர்கள் " இரு பாவைகள் " என்னும் பொருள்பற்றி அழகாக சொற் பொழிவாற்றினர்கள். நிர்வாக அதிகாரி திரு C. V. இராசாராம், B. A., B. L., அவர்களும் அறங்காவலர் குழுத்தலைவர் பி. கதிரேசன் அவர்களும், அறங்காவலர்திரு T. A. புஷ்பநாதம் பிள்ளை ஆகியோர் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிகவும் நல்லமுறையில் நடத்திவைத்தார்கள். அறங்காவலர் திரு T. A. புஷ்பநாதம்பிள்ளை சிறப் புரை யாற்றினர்கள். விழாத்தலைவர் உயர்திரு P. R. பக்கிரிசங்கர் M. A., B. L. துணை ஆணையர், கோவை, அவர்கள் பாவைப்போட்டியில் வெற்றி பெற்ற குழந்தைகளுக்குப் பரிசு கள் வழங்கினர். நன்றி நவிலலுடன் விழா இனிது முடிவடைந்தது.

49 திருச்சிமாவட்டம்–லால்குடியைசேர்ந்த திருமங்கலம் : 8—1—71 வெள்ளிக் கிழமையன்று ஸ்ரீ லோகநாயகி சமேத ஸ்ரீ சாமவேதீஸ்வர சுவாமி தேவஸ்தானத்தில் திருப் பாவை–திருவெம்பாவை மாநாடு திருச்சி இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை உதவி ஆணையர் உயர்திரு N. சீனிவாசன் B. A. B. L. அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. அதுசமயம் புத்தனம்பட்டி, நேரு கல்லூரி தமிழ் விரிவுரையாளர் நாவலர் திரு A. V. ராஜகோபாலன், M. A., அவர்கள் ' திருவெம்பாவை ' என்னும் பொருள் பற் றியும் திருச்சி தேசியக் கல்லூரி தமிழ் விரிவிரையாளர் திரு சோ. சத்தியசீலன் M.A. B. T., அவர்கள் ' திருப்பாவை ' குறித்தும் அழகாக சொற்பொழிவாற்றினர்கள். விழாத்தலைவர் திரு N. சீனிவாசன் B. A. B. L., அவர்கள் (உதவி ஆணையர், இந்து சமய அறநிலைய ஆட்சி துறை திருச்சி) பாவைப்போட்டியில் வெற்றிப்பெற்ற குழந்தைகளுக்குப் பரிசுகள் வழங் கினர். நன்றி நவிலலுடன் விழா இனிது முடிவடைந்தது. நிர்வாக அதிகாரி திரு D. A. முரு கேசன் B. A., நிர்வாக அறங்காவலர் திரு T. V. பிச்சை, அறங்காவலர்கள் திரு T. V. ரெங்கசாமி அய்யர் பி. ஏ., திரு L. V. இராமலிங்கம் பிள்ளை ஆகியோர் விழாவிற்கான எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிகவும் நல்லமுறையில் நடத்திவைத்தார்கள்.

50 திருச்சி மலைக்கோட்டை: 9—1—71 சனிக்கிழமையன்று ஸ்ரீ தாயுமானவர் திருக்கோயில் நூற்றுகால் மண்டபத்தில் திருப்பாவை–திருவெம்பாவை விழா திருச்சி இந்து சமய அறநிலையத்துறை உதவி ஆணையர் உயர்திரு N. சீனிவாசன் B. A. B. L., அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. பாவைப் போட்டியில் வெற்றிபெற்ற குழந் தைகளுக்கு பரிசுகள் வழங்கப்பட்டது. மதுரை—மதுரை கல்லூரி தமிழ் விரிவுரையாளர் வித்வான் திரு வி. துரைசாமி, M. A., அவர்கள் அழகாக சொற்பொழிவாற்றினர்கள். நன்றி நவிலலுடன் விழா இனிது முடிவடைந்தது. நிர்வாக அதிகாரி திரு V. வாசகப்பெருமாள் B. Com., B. L,, நிர்வாக தர்மகர்த்தா திரு R. கிருஷ்ணசாமி ரெட்டியார், தர்மகர்த்தாக்கள் திரு A. T. P. தேவராஜ பிள்ளை திரு V. பிச்சைக்காரன் ஆகியோர் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்தி வைத்தார்கள்.

51 புதுக்கோட்டை: 10-1-71 ஞாயிற்றுக்கிழமையன்று குலபதி பாலையா நடுத்தரப் பள்ளியில் பாவை மாநாடு உள்ளூர் ஜில்லா முன்சிப் திரு எஸ். ஜானகிராமன் B. A. B. L., அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. துவக்கத்தில் மாயூரம் திரு சுந்தரேச சாஸ்த்திரிகள் ஸ்ரீ காமகோடி மடத்தின் சார்பாக ஜகத்குரு ஸ்ரீ ஆச்சார்யாளின் பிரசாதத்தையும் கொடுத்து ஸ்ரீ ஆச்சார்யாளின் ஆசிச்செய்தியையும் வாசித்தார். ஆர்கனைசர் 'ஆஸ்திக சார்வபௌம' M. K. வெங்கட்டராமன் யாவரையும் வரவேற்றார். தலைவர் துவக்க உரைக்குப்பின் சமூக சேவகி திருமதி பிருந்தாதேவி அவர்கள் "பாவையும் பாவையரும்" என்னும் பொருள் பற்றியும், புலவர் இரா. சொக்கலிங்கம் "தீயினில் தூசாகும்" என்னும் பொருள் பற்றியும் பனி பொருள் அலுவலக ஆய்வர் திரு சங்கர் B. A., 'பக்தி' என்னும் பொருள்பற்றியும் மிக அழகாக நீண்ட நேரம் சொற்பொழிவாற்றினார்கள். பாவைப் போட்டியில் வெற்றிபெற்ற சிறுவர் சிறுமிகளுக்கு பரிசுகளும், ஸ்ரீ ஆச்சார்ய சுவாமிகள் அனுக்கிரஹித்த பிரஸாதம், வெள்ளிக்காசுகள் வழங்கப்பட்டது. இறுதியில் செயலாளர் திரு M. K. வெங்கட்டராமன் யாவருக்கும் நன்றி கூறுகையில் மாயூரம் திருப்பாவை திருவெம்பாவை மத்ய குழு காரியதரிசி திரு S. ராமமூர்த்தி அய்யர் அவர்கள் ஆற்றி வரும் தொண்டையும் ஊக்கத்தையும் பாராட்டியதோடு, பாலையா பள்ளி தலைமை ஆசிரியர் திரு B. பாலசுப்ரமண்யம் அவரது சகாக்களும் விழா வெற்றிபெற உதவியதற்கு நன்றி செலுத்தி. மற்றும் பொது மக்களுக்கும் நன்கொடையாளர்களுக்கும் நன்றிகூற விழா இனிது முடிந்தது. செயலாளர் திரு M. K வெங்கட்டராமன் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்தி வைத்தார்.

52 திருச்சி—பெரம்பலூர்: 10—1—71 ஞாயிற்றுக்கிழமையன்று பெரம்பலூர் ஸ்ரீ மதனகோபாலசுவாமி கோயிலில் பாவை மாநாடு திரு P. P. பச்சைமுத்து முதலியார் அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. பாவைப்போட்டியில் கலந்து கொண்டு வெற்றிபெற்ற குழந்தைகளுக்கு பரிசுகள் தலைவர் திரு P. P. பச்சமுத்து முதலியார் அவர்கள் வழங்கினார்கள். டாக்டர் திரு T. V. வேலாயுதம், புலவர் இந்திரா. டாக்டர் V. நாகராஜன், திரு R. வெங்கட்ராமன், திரு K. ஆறுமுகம் B. A., திரு K. ராமலிங்க கவுண்டர், திரு. இராசி. காகரத்தினம், புலவர் திரு கருணை சிவப்பிரகாசம் ஆகியோர் பாவை மாநாடு பற்றி சிறப்புரை ஆற்றினார்கள். ஆலய நிர்வாக அதிகாரி Dr. T. V. வேலாயுதம் நன்றி உரையுடன் விழா இனிது முடிவடைந்தது. நிர்வாக அதிகாரி திரு T. V. வேலாயுதம் அறங்காவலர்கள் திரு P. P. பச்சமுத்து முதலியார் C. B. T. திரு R. ராஜு செட்டியார், திரு P. சங்கரன் ஆகியோர் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்லமுறையில் நடத்திவைத்தார்கள்.

53 திருச்சி—மலைக்கோட்டை: 3—1—71 ஞாயிற்றுக்கிழமையன்று திரிசிரபுரச் சைவ சித்தாந்த சபையினரால் நடத்தப்பெற்றப் பாவைப்போட்டியில் தேர்வுபெற்ற மாணவிகளுக்கு 10—1—71 ஞாயிற்றுக்கிழமையன்று பரிசளிப்பு விழா திருச்சி ஓய்வுபெறும் தலைமை ஆசிரியர் திரு K. V. பாலசுப்ரமணிய முதலியார் B. A., L. T., அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. சபைச்செயலாளர் திரு சிவப்பிரகாசம் அவர்களின் வரவேற்புரைக்குப்பின் ஸ்ரீ ஆசார்ய சுவாமிகளின் ஆசிச்செய்தி திரு V. பாபு கோபால் அவர்களால் வாசிக்கப்பட்டு திருமதி மீனாட்சி பாலசுப்பிரமண்யம் (திருச்சி) அவர்கள் பரிசுகளையும் ஸ்ரீ அம்பாள் வெள்ளிக்காசுகளையும் வழங்கினார்கள். திருச்சி பக்த தாயுமானவர் உயர்தர ஆரம்பப் பாடசாலைத் தலைமை ஆசிரியை திருமதி S. ருக்மணிதேவி அவர்கள் இவ்விழாவில் முக்கிய பங்கெடுத்துக்கொண்டு விழாவைச் சிறப்பாக நிறைவுபெறச் செயலாளர்க்குப் பெரும் உதவியாக இருந்தார்கள். செயலாளரின் நன்றி நவிலலுடன் விழா

இனிது முடிவடைந்தது. செயலாளர் திரு தி. சு. சிவப்பிரகாசம் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்லமுறையில் நடத்திவைத்தார்கள்.

*54* திருச்சி—உறையூர் : *10-1-71* ஞாயிற்றுக்கிழமை முதல் *14-1-71* வியாழக்கிழமை வரை உறையூர் வாகீச பக்த ஜன சபைச் சமரச சுத்த சன்மார்க்க சங்கத்தின் சார்பில் திருப்பாவை — திருவெம்பாவை விழா, கூத்தப்பெருமான் விழா, திருமுறை விழா பட்டிமன்ற விழா, விநாயகர் அகவல் நிறைவு விழா ஆகிய விழாக்கள் அடியிற்கண்டபடி மிகச் சிறப்பாக நடைபெற்றது. அதுசமயம், *10—1—71* ஞாயிற்றுக்கிழமை யன்று கூத்தப்பெருமான் விழா உயர்திரு ஆ. சி. இலிங்கையன் செட்டியார் அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. உயர்திரு பி. சண்முகம்பிள்ளை அவர்கள் விழாவைத் துவக்கிவைத்தார்கள். உயர்திரு வித்வான் ஞானமணி ஞானத்தமிழாகரர் வை. ரத்தினசபாபதி B. O. L., M. A., அவர்கள் " அம்மை காட்டிய அருளாட்டு " என்னும் பொருள்பற்றி அழகாகச் சொற்பொழிவாற்றினர்கள். நன்றி நவிலலுடன் விழா இனிது முடிவடைந்தது.

*11—1—71* திங்கட்கிழமை யன்று திருமுறை விழா திருச்சி T. T. C. முதல்வர் உயர்திரு P. N. ராமன் B. A., Hons, L. T., அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. அதுபோது திரு ஆ. சி. இலிங்கையன் செட்டியார் அவர்கள் விழாவைத் துவக்கிவைத்தார்கள். அருண்மொழியரசு அருட்பெருந்திரு குகஸ்ரீ கிருபானந்தவாரியார் சுவாமிகள் அவர்கள் " நந்தனர் " என்னும் பொருள்பற்றி சொற்பொழிவாற்றினர்கள்.

*12—1—71* செவ்வாய்க்கிழமை யன்று பட்டிமன்ற விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. அதுசமயம் திரு K. சாமிநாதமுதலியார் அவர்கள் விழாவைத் துவக்கிவைத்தார்கள். தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள் நடுவராக இருந்தார்கள். " பெரியபுராணம் வலியுறுத்துவது தொண்டு நெறியா ? பக்தி நெறியா ? என்னும் பொருள்பற்றி பட்டிமன்றம் நடைபெற்றது. திரு சோ. சத்யசிலன் M. A., B. T., திரு புலவர் மு. கணபதி அவர்கள், திரு இலஞ்சி முத்துகுமாரசாமி ஆகியவர்கள் தொண்டுநெறி பற்றியும் திரு வை, ரத்தினசபாபதி B. O. L. M. A., அவர்கள், திரு வ. ராசகோபாலன் M. A., அவர்கள் திரு மு. பாலசுப்ரமணியம் B. A , அவர்கள் ஆகியோர் பக்திநெறி பற்றியும் உறையாற்றி விழாவை சிறப்பித்துவைத்தார்கள்.

*13—1—71* புதன்கிழமையன்று பாவை விழா திருச்சி மாவட்ட ஆட்சித் தலைவர் உயர்திரு T. D. சுந்தாராஜ் I. A S,. அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. உயர்திரு V. சினிவாசன் செட்டியார் அவர்கள் விழாவைத் துவக்கிவைத்தார்கள். திரு ரா. ராதாகிருஷ்ணன் அவர்கள் " இரு பாவைகள் " என்பதுபற்றியும் திரு வை. ரத்தினசபாபதி B. O L., M A , அவர்கள் " திருவருட்பா " என்னும் பொருள்பற்றியும் அழகாக சொற்பொழிவாற்றினர்கள். இரவு 9 மணிக்கு விழா தலைவர் அவர்களால் கலைமாமணி, வேணுகான இசை கிளாரினெட் வித்வான் திரு A. K. C. வேணுகோபால் அவர்களுக்கு பட்டமளித்துப் பொன்னாடை போர்த்தப்பட்டது. கிளாரினெட் கச்சேரி மிகச் சிறப்பாக நடைபெற்றது. நன்றி நவிலலுடன் விழா இனிது முடிவடைந்தது.

*14—1—71* விநாயகர் அகவல் நிறைவு விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. சங்கத் தலைவர் வித்துவான் ஞானமணி, ஞான தமிழாகரர் திரு வை. ரத்தினசபாபதி B. O. L. M. A. அவர்களும், துணைத்தலைவர்கள் திரு K. சுவாமிநாத முதலியார், திரு M. கோபாலன், திரு M M. வைத்யலிங்கம் பிள்ளை, செயலாளர்கள் திரு V. சினிவாசன் செட்டியார். திரு ஜே. மு. பாலசுப்பிரமண்யம், திரு D. கோவிந்தசாமி செட்டியார், திரு பி. சண்முகம் பிள்ளை பொருளாளர் திரு ஆ. சி. இலங்கையன் செட்டியார் புரவலர்கள் திரு

K. N. P. அருணாசலமுதலியார், திரு மு. ஆ. அருணாசலமுதலியார், திரு முக்கப்பிள்ளை. திரு சி. துரைராஜு நாயுடு. திரு P. N, ராமன் B, A, Hons. L. T., திரு T. C. வடிவேல் பிள்ளை ஆகியோர் விழாக்களுக்கான எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாக்களை மிக நல்ல முறையில் நடத்திவைத்தார்கள்.

55 தொட்டியம் : *11—1—71* திங்கட்கிழமையன்று ஸ்ரீ அனலாடீஸ்வரர் ஆலயத்தில் திருப்பாவை-திருவெம்பாவை மாநாடு திருச்சி இந்துசமய அறநிலைய ஆட்சித்துறை உதவி ஆணையர் திரு N. சீனிவாசன் பி. ஏ. பி. எல்., அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. விழாவின்போது அறங்காவலர் திரு ரா. ஆறுமுகம்பிள்ளை அவர்கள் வரவேற்புரை வழங்கினர். தமிழ் விரிவுரையாளர் திரு அ. வ. ராஜகோபாலன் M. A., அவர்கள் " இரு பாவைகள் " என்னும் பொருள் பற்றியும், திருச்சி தமிழாசிரியர் திருமுறைச் செம்மல் புலவர் மு. கணபதி அவர்கள் 'கோதாட்டும் சீலம்' என்னும் பொருள் பற்றியும், திருச்சி இந்து சமய பரப்புனர் திரு நாகரத்தினம் அவர்கள் 'திருப்பாவை-திருவெம்பாவை' என்னும் பொருள் பற்றியும் அழகாகச் சொற்பொழிவாற்றினர்கள். பாவைப்பாடல் போட்டியில் வெற்றி பெற்ற குழந்தைகளுக்கு தலைவர் திருச்சி உதவி ஆணையர் திரு நா. சீனிவாசன் பி. ஏ. பி. எல்., அவர்கள் பரிசுகள் வழங்கினர்கள். அறங்காவலர் திரு வீ. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் நன்றிகூற விழா இனிது முடிவடைந்தது. இசை நிகழ்ச்சி இரவு 8 மணிக்கு தொட்டியம் கலைவாணி மன்றத்தாரின் " பிட்டுக்கு மண் சுமந்த கதை " வில்லிசை கலா நிகழ்ச்சி மிகச் சிறப்பாக நடைபெற்றது. நிர்வாக அதிகாரி திரு சி. குஞ்சிதபாதம் பி. எஸ்ஸி., அறங்காவலர் குழுத்தலைவர் திரு பு. வி. பெரியசாமிபிள்ளை, அறங்காவலர் திரு ரா. ஆறுமுகம்பிள்ளை திரு வீ. கிருஷ்ணமூர்த்தி ஆகியோர் விழாவிற்கான எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்லமுறையில் நடத்தி வைத்தார்கள்.

56 லால்குடிவட்டம்—கூகூர் : *11—1—71* திங்கட்கிழமையன்று ஸ்ரீ குஹேஸ்வர ஸ்வாமி தேவஸ்தானத்தில் திருப்பாவை-திருவெம்பாவை விழா கூகூர் ஊராட்சி மன்றத் தலைவர் திரு K. N. தங்கவேலு அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. அதுபோது பாவைப்போட்டியில் பங்கு கொண்ட 11 பள்ளி மாணவ மாணவிகளுக்குப் பரிசுகள் வழங்கப்பட்டது. திரு புலவர் உ. புவியரசன் அவர்கள், இரு பாவைகள்' என்ற பொருளில் நின்று விரிவுரையாற்றினர்கள். அறங்காவலர் திரு G. கனகசபை அவர்கள் ஸ்ரீ ஆசார்ய சுவாமிகளின் திருமுகத்தை வாசித்து, வந்திருந்தோரை வரவேற்று இறுதியில் நன்றி கூற கூட்டம் இனிது முடிந்தது. பரம்பரை அறங்காவலர் திரு G. கனகசபை விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்லமுறையில் நடத்தி வைத்தார்கள்.

57 லால்குடி தாலுக்கா—பச்சாம்பேட்டை : *11—1—71* திங்கட்கிழமையன்று ஸ்ரீ இராமலிங்கேஸ்வர் ஆலயத்தில் 3 வது ஆண்டு பாவை விழா மிகச்சிறப்பாக நடைபெற்றது. அதுசமயம் வயலூர் திருப்புகழ் சபைத் தலைவர் தவத்திரு மயில் வாகனஸ்வாமி அவர்கள் 'ஆறுமுகசிவனும் அருணகிரிநாதரும்' எனும் பொருள்பற்றி அழகாக விரிவுரையாற்றினர்கள். நிர்வாக அறங்காவலர் டாக்டர் P. S. சந்திரசேகரன் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்தி வைத்தார்கள்.

58 லால்குடி தாலுக்கா—மேலவாளாடி : *13—1—71* புதன்கிழமையன்று திருப்பாவை திருவெம்பாவை வழிபாட்டுக் குழுவின் சார்பில் 11 வது ஆண்டு பாவை விழா பஞ்சாயத்து போர்டு தலைவர் திரு M. வேலுப்பிள்ளை அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாக

நடைபெற்றது. மேலும் லால்குடி ப்ரூக் பாண்ட் திரு ராமனுதன் அவர்கள் ' ஆடும் தீர்த்தன்' என்னும் பொருள் பற்றியும் லால்குடி திரு R. பண்டரிநாதன் அவர்கள் ' திருப்பாவை ' என்னும் பொருள் பற்றியும் அழகாகச் சொற்பொழிவாற்றினர்கள். மேலவாளாடி பாவை வழிப்பாட்டுக் குழுவினர்கள் விழாவிற்குவேண்டிய எல்லாஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்திவைத்தார்கள்.

59 ஸ்ரீரங்கம் : *17—1—71* ஞாயிற்றுக்கிழமையன்று வடக்கு அடைய வளஞ்சான் வீதியில் ஸுதாமா சங்கத்தார் ஆதரவில் ' திருப்பாவை பாராயண ' பூர்த்தி மஹோத்ஸவம் மிக சிறப்பாக நடைபெற்றது. ஸ்ரீ வேங்கடேஸ ஸ்ரீ ரெங்கநாத ஸுப்ரபாதம், திருப்பள்ளி யெழுச்சி, திருப்பாவை அநுஸந்தானம் செய்து வந்த சிறுவர் சிறுமியர்களுக்கு ஸன்மானம் வழங்கப்பட்டது. ஸ்ரீ ஆண்டாள் திருகல்யாண உத்ஸவம், உபன்யாஸங்கள், குழந்தைகள் கதம்ப நிகழ்ச்சி மிகச் சிறப்பாக நடைபெற்றது.ஸுதாமா சங்கத்தார் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்தி வைத்தார்கள்.

60 புதுக்கோடி, புளியங்குடி : *18—1—71* திங்கட்கிழமையன்று திருமலைநாயக் கன் சுயம்புலிங்கம் உயர் துவக்கப்பள்ளியில் திருப்பாவை திருவெம்பாவை விழா புளியங் குடி சரக காவல்துறை ஆய்வாளர் உயர்திரு வெ. ரா. மு. இராமலிங்கம் B. A,, அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. புளியங்குடி, அரசினர் உயர்நிலைப்பள்ளி திரு மு. மாடசாமி பி. ஏ. பி. டி., அவர்கள் " பாவைச் சிறப்பு " என்னும் பொருள் பற் றியும், முள்ளிக்குளம் அரசினர் உயர்நிலைப்பள்ளி முதனிலை தமிழாசிரியர் திரு ந. புதுவை விநாயகம் அவர்கள் " பாவைப் பாட்டு " என்னும் பொருள்பற்றியும், புளியங்குடி திரு மலைநாயக்கன் புதுக்குடி திரு சி. பாலசுப்பிரமணியப்பிள்ளை அவர்கள் 'இருபாவைகள்' என்னும் பொருள்பற்றியும் அழகாகச் சொற்பொழிவாற்றினர்கள். அவ்வமயம் மாணவ மாணவியரின் பாவைப்போட்டி, பேச்சுப்போட்டி நடைபெற்று பரிசுகளும் வழங்கப்பட்டது. ஷை பள்ளி நிர்வாகி & ஆசிரியர்கள் விழாவிற்கான எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்திவைத்தார்கள்.

61 துறையூர் : *23—1—71* சனிக்கிழமையன்று ஸ்ரீ பிரஸன்ன வெங்கடாசலபதி ஸ்ரீ நந்திகேஸ்வரர்சுவாமி, ஸ்ரீ காசி விஸ்வநாதர் சுவாமி, ஸ்ரீ மாரியம்மன். ஸ்ரீ நல்லாவத்தாய் அம்மன் தேவஸ்தானங்களின் சார்பாக பாவை மாநாடு விழாவும். தமிழ் அர்ச்சனை துவக்க விழாவும் ஸ்ரீ நந்திகேஸ்வரர்சுவாமி ஆலயத்தில் திருச்சி மாவட்ட இந்து அறநிலைய ஆட்சித் துறை உதவி ஆணையர் உயர்திரு N. சீனிவாசன் B. A. B. L., அவர்கள் தலைமையில் முசிறி கோட்டாச்சித் தலைவர் உயர்திரு கே. சுந்தரமூர்த்தி எம். காம்., அவர்கள் முன்னிலையில் தவத்திரு குன்றக்குடி அடிகளார் M. L. C., அவர்களால் துவக்கி வைக்கப்பட்டு மிகவும் சிறப்பாக நடைபெற்றது. அதுசமயம் தவத்திரு குன்றக்குடி அடிகளார் M L C. அவர்கள் " தமிழ் அர்ச்சனை விழா நினைவு மலரை " வெளியிட்டார்கள். மாநாட்டுத் தலைவர் உ த வி ஆணையர் (இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை, திருச்சி ) திரு N. சீனிவாசன் B. A. B. L, அவர்கள் பாவைப் போட்டியில் கலந்துகொண்டு வெற்றி பெற்றவர்களுக்கு பரிசுகள் வழங்கினர். அறங்காவலர் குழுத்தலைவர் திரு K. N. துரைசாமி ரெட்டியார் வரவேற்புரை வழங்கினர். தவத்திரு குன்றக்குடி அடிகளார் M L C, அவர்கள் ' இருபாவைகளின் மாண்பு ' என்னும் பொருள்பற்றி அழகாகச் சிறப்புரையாற்றினர்கள். தவத்திரு குன்றகுடி அடிகளார் M L C, அவர்கள் தலைமையில் கவியரங்கம் மிகச்சிறப்பாக நடைபெற்றது.

திரு S. P. அமலன், திரு துரை, சு. கல்யாணசுந்தரம், திரு வேல் இளங்கோவன், திரு ச. விரேசன் (துறையூர் திரு வி. க. கல்லூரி) திரு K. ஆறுமுகம் B. A., திரு கயிலை தமிழ்ச் செழியன், திருமதி செல்வி அ. சு. சந்திரா, திரு கி. அ. முத்தரசன் (துறையூர் திரு வி க கல்லூரி) ஆகியோர் இதில் கலந்துக்கொண்டனர். துறையூர் ஸ்ரீ பிரஸன்ன வெங்கடாசலபதி தேவஸ்தான நிர்வாக அதிகாரி திரு K. ஆறுமுகம் B. A., அவர்கள் நன்றி நவிலவிழா இனிது முடிந்தது. நிர்வாக அதிகாரி திரு K. ஆறுமுகம் B. A., அறங்காவலர் குழுத்தலைவர் திரு K. N. துரைசாமி ரெட்டியார், அறங்காவலர்கள் திரு A. M. முத்துகிருஷ்ண குப்தா, திரு K. அருணாசலம் பிள்ளை, ஆகியோர் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்லமுறையில் நடத்திவைத்தார்கள்.

62 முசிறி : 24–1–71 ஞாயிற்றுக்கிழமையன்று ஸ்ரீ சித்திவிநாயகர் சபையின் சார்பில் பாவை மகாநாடு முசிறி திருமதி லட்சுமிபாய் அம்மாள் நினைவு ஞான சபையில் திரு V. சினிவாஸ ராவ் பி. ஏ. பி. எல்., அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாக நடை பெற்றது. அதுசமயம் முசிறி ஸ்ரீ சித்திவிநாயகர் சபை தலைவர் திரு M. ராமச்சந்திரன் செட்டியார் அவர்கள் வரவேற்புரை வழங்கினார்கள். முசிறி மிராசுதார் திரு வெ. மாணிக்கம் செட்டியார் அவர்கள் பாவைப்போட்டியில் வெற்றிபெற்ற குழந்தைகளுக்கு பரிசுகள் வழங்கினர். பட்டிமன்றத் திலகம் நாவலர் திரு அ. வ. ராஜகோபாலன் M. A, அவர்கள் பாவை என்னும் பொருள் பற்றியும் திருச்சி மாவட்ட சமயப்பரப்புனர் திரு இராசி. நாகரத்தினம் அவர்கள் ' ஆண்டாளும் மணிவாசகரும் ' என்னும் பொருள் பற்றியும், திருவண்ணாமலை ஆதினகர்த்தர் தவத்திரு குன்றக்குடி அடிகளார் M L C, அவர்கள் ' திருப்பாவை திருவெம்பாவை ' என்னும் பொருள் பற்றியும் அழகாகச் சொற்பொழிவாற்றினர்கள். திருச்சி S. M. E. S, Co Ltd., ஜூனியர் இன்ஜினீயர் திரு ராமமூர்த்தி அய்யர் அவர்கள் நன்றிகூற விழா இனிது முடிவடைந்தது. மேற்படி சபைத் தலைவர் திரு M. இராமச்சந்திரன் செட்டியார் அவர்களும் ஏனைய அங்கத்தினர்களும் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்லமுறையில் நடத்திவைத்தார்கள்.

63 திருச்சி மாவட்டம், பெரம்பலூர் வட்டம் செட்டிகுளம் ; 25–1–71 திங்களன்று ஸ்ரீஏகாம்பரேஸ்வரர் & ஸ்ரீதெண்டாயுதபாணிசுவாமி தேவஸ்தானத்தில் திருப்பாவை திருவெம்பாவை மாநாடு அறங்காவலர் குழுத்தலைவர் உயர்திரு P. P. பச்சமுத்து முதலியார் அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. நிர்வாக அதிகாரி திரு T. ராஜப்பா வரவேற்புரை வழங்கினர். துறையூர் ஸ்ரீ பிரஸன்ன வெங்கடாஜலபதி தேவஸ்தான நிர்வாக அதிகாரி திரு K, ஆறுமுகம் பி. ஏ , அவர்கள் சிறப்புரையாற்றினர்கள். மேலும் அன்னமங்களம் சிறுமலர் உயர்நிலைப்பள்ளி கவிஞர் திரு சுப்பிரமண்ய கல்யாணசுந்தரம் " பாவை நோன்பின் பயன் " என்னும் பொருள்பற்றியும், பெரம்பலூர் அரசு உயர்நிலைப்பள்ளி செல்வி பர்வதம் பி. ஏ., பி. டி., அவர்கள் " சைவ மங்கையர் " என்னும் பொருள்பற்றியும், செட்டிகுளம் அரசு உயர்நிலைப்பள்ளி தலைமை தமிழாசிரியர் புலவர் திரு சு. அழகப்பன் ' மணிவாசகர் ' எனும் பொருள் பற்றியும், திருச்சி ஹோலிகிராஸ் கல்லூரி விரிவுரையாளர் செல்வி ப. நாகபூஷணம் M. A. அவர்கள் " பூவைப் பாடிய பாவை ' எனும் பொருள்பற்றி அழகாகச் சொற்பொழிவாற்றினர்கள். நாகலாபுரம் ஊராட்சி மன்றத்தலைவர், செட்டிக்குளம் தேவஸ்தான அறங்காவலருமான திரு M. நல்லுசாமிக் கவுண்டர் பாவைப்போட்டியில் வெற்றிபெற்ற குழந்தைகளுக்கு பரிசுகள் வழங்கினர். நிர்வாக அதிகாரி திரு T. ராஜப்பா நன்றி கூற விழா இனிது முடிவடைந்தது. நிர்வாக அதிகாரி திரு T. ராஜப்பா, அறக்குழுத் தலைவர் திரு P. P. பச்சமுத்து முதலியார், அறங்காவலர்கள் திரு M. துரைசாமிக் கவுண்டர், திரு A. சின்னசாமி ரெட்டியார், திரு P. முத்து, திரு M. நல்லுசாமி கவுண்டர் ஆகியோர் விழாவிற்கான எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்லமுறையில் நடத்தி வைத்தார்கள்.

64 புதுக்கோட்டை : *14—2—71* ஞாயிற்றுக்கிழமையன்று ஓரியண்டல் உயர்நிலைப்பள்ளியில் திருப்பாவை-திருவெம்பாவை விழா வெகுவிமரிசையாக கொண்டாடப்பட்டது. அதுசமயம் இந்நகர் கால்நடை உதவி இயக்குநர் ஸ்ரீமான் P. பாலசுப்ரமண்ய அய்யர் G. M. V. C. அவர்கள் விழாவிற்கு தலைமை தாங்கி விழாவை சிறப்பித்து வைத்தார்கள்




புதுக்கோட்டையில் ஓரியண்டல் உயர்நிலைப்பள்ளி பாவை விழாவில் கலந்து கொண்ட குழந்தைகள்.

பிரும்மஸ்ரீ K. A. பஞ்சாமகேச தீக்ஷிதர் அவர்களும், ஆசிரியை ஸ்ரீமதி S. மீனாக்ஷி அவர்களும் பாவை விழாவின் சிறப்பு குறித்து சொற்பொழிவாற்றினார்கள். பாவைப் போட்டியில் கலந்துக்கொண்டு வெற்றி பெற்ற குழந்தைகளுக்கு பரிசுகள் வழங்கப்பட்டது. பாலசம்ரக்ஷண வித்யாசாலை தலைமை ஆசிரியர் திரு G. ராமமூர்த்தி அவர்கள் நன்றி கூற விழா இனிது நிறைவேறியது. நிர்வாகி திரு S. பாலசுப்ரமண்ய அய்யர் பி. ஏ. பி. எல்., அவர்கள் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்லமுறையில் நடத்தி வைத்தார்கள்.

65 திருவானைக்காவல் : *21—2—71* ஞாயிற்றுக்கிழமையன்று ஸ்ரீ ராமதாஸ் பக்த ஜனசபாவின் சார்பில் திருப்பாவை-திருவெம்பாவை விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. விழாவன்று திருச்சி திரு V, பாபுகோபால் அவர்கள் கலந்துக்கொண்டு பாவைப் போட்டியில் வெற்றிபெற்ற குழந்தைகளுக்கு ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகள் அனுக்ரஹித்த பிரஸாதம், ஸ்ரீ அம்பாள் காசுகள் வழங்கியும் ஸ்ரீ ஆச்சார்ய சுவாமிகள் ஆசிச் செய்திகளையும் வழங்கி குழந்தைகளை ஆசீர்வதித்தார்கள். ஷ சபாவின் 13 ஆண்டு விழாவும் ஸ்ரீ ராதா கல்யாணம், ஸ்ரீ ஸமர்த்த ராமதாஸரின் ஆராதனையும் வெகு விமரிசையாக நடந்தேறியது. பக்தர்களும் பாகவதர்களும் திரளாக வந்திருந்து விழாவை சிறபித்து வைத்தார்கள். செயலாளர் திரு G. வைத்தியநாதன் அவர்கள் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை சிறப்பித்து வைத்தார்கள்.

66 மதுரை ஆரப்பாளையம் : 16—12—70 புதன்கிழமை முதல் பக்தஜனசபாவின் சார்பில் பாவை நோன்பு பெருவிழா மஹாவரபிரசாதியான ஸ்ரீ ஜெயவீர ஆஞ்சநேயர் சந்நிதியின் முன்பாக மிகவும் சிறப்பாக நடைபெற்றது. அதுசமயம் உயர்திரு சினி சௌமிய நாராயணன் M. A, அவர்கள் 'திருப்பாவை' பற்றியும் உயர்திரு சாமி அருணசடேசன் அவர்கள் 'திருவெம்பாவை' பற்றியும் அழகாக விரிவுரையாற்றினார்கள். ராதா கல்யாண மஹோத்ஸவத்துடன் விழா இனிது முடிவுற்றது. பக்த ஜன சபையார் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்லமுறையில் நடத்தி வைத்தார்கள்.

67 மதுரை ' 29—12—70 முதல் 31—12—70 வரை ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேசுவரர் வகையரு தேவஸ்தானத்தில் 'திருப்பாவை-திருவெம்பாவை' மாநாடு மிகச் சிறப்பாக நடைபெற்றது. அதுசமயம் தமிழ்நாடு இந்துசமய அறநிலைய ஆட்சித்துறை ஆணையர் உயர்திரு K. S. நரசிம்மன் B. A. B. L., I. A. S.. அவர்கள் விழாவிற்குத் தலைமைத்தாங்கி விழாவை துவக்கி வைத்தார்கள். தவத்திரு குன்றக்குடி அடிகளார் M L C அவர்கள் பாவை போட்டியில் கலந்துக்கொண்டு வெற்றிபெற்ற குழந்தைகளுக்கு பரிசுகள் வழங்கினர்கள். பேராசிரியர் வித்வான் திரு கு. அருணசலக்கவுண்டர் அவர்கள் சிறப்பு சொற்பொழிவாற்றினர்கள். மதுரை இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை துணை ஆணையர் உயர்திரு M. சூரியராஜ் பி. ஏ. பி. எல்., அவர்கள் கலந்துக்கொண்டு உரையாற்றினர்கள். நன்றி நவிலலுடன் 29—12—70 தேதி விழா பூர்த்தி அடைந்தது. நிகழ்ச்சி தொடங்குவதற்கு முன் திருக்கோவில் நாதசுவர வித்வான் திரு N. அழகுசுந்தரம் குழுவினர் நாதசுவர இசை நடைபெற்றது.

30—12—70 புதன்கிழமையன்று பட்டி மண்டபம் நிகழ்ச்சியை தேவக்கோட்டை அண்ணமலைச் செட்டியார், முதல்வர் திரு நா. பாலுசாமி M. A. M. Litt,, அவர்கள் நடுவராக இருந்து நிகழ்த்தி வைத்தார்கள். பட்டிமண்டபம் "பாவைப் பாடலில் விஞ்சி நிற்பது இறை உணர்வே ! சமுதாய உணர்வே" என்னும் பொருள் பற்றி நடைபெற்றது. அதில் கலந்து கொண்டவர்கள் 1 மதுரை தியாகராசர் கல்லூரி பேராசிரியர் திரு அ. சங்கரநாராயணன் M. A. M. Litt., 2 மதுரை இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை தனி அலுவலர். திரு இரா. அரங்கசாமி, B. Sc.. B. L. 3 மதுரை தமிழாசிரியர் புலவர் திருமதி இரா. காந்திமதி. 4 மதுரை, தமிழ்ப்புலவர் திரு நீ. சி. சுந்தரராமன், 5மதுரை தியாகராசர்கல்லூரி தமிழ் துறைத்தலைவர் டாக்டர் சுப. அண்ணமலை M. A. Ph. D. 6 மதுரை செந்தமிழ் கல்லூரி புலவர் திரு ச. சாம்பசிவம், 7 மதுரை தமிழாசிரியர் புலவர் திருமதி ச. அனுசுயா B. A., 7 மதுரை தமிழாசிரியர் புலவர் திரு தா. குருசாமி ஆகியோர் பட்டிமண்டப நிகழ்ச்சியில் கலந்து கொண்டனர்.

31—12—70 வியாழக்கிழமையன்று திரு T. K. பாலகிருஷ்ண அய்யங்கார் குழுவினரின் 'பாவை இன்னிசை' நிகழ்ச்சி மிகச் சிறப்பாக நடைபெற்றது. நிர்வாக அதிகாரி திரு S. திருமலையப்பன், B. A. B. L. அறங்காவலர்கள் திரு அ. சிதம்பர முதலியார் அவர்கள், திரு ஆ. வெங்கடேஸ்வரய்யர் B. A. B. L., அவர்கள், திரு க. ராமகிருஷ்ணன் அவர்கள், திரு அ. பாலமுருகேசன் பி. ஏ. பி. எல்., அவர்கள், திரு S. T. ராய் ஆகியோர் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்லமுறையில் நடத்தி வைத்தார்கள்.

68 சங்கரநயினர்கோவில் ; 3-1-71 ஞாயிற்றுக்கிழமையன்று ஸ்ரீ சங்கரநாராயண சுவாமிதேவஸ்தானத்தில் திருப்பாவைதிருவெம்பாவை மாநாடு ஷ்தேவஸ்தான தருமகர்த்தர் திரு கா. புலித்துரை அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. அதுசமயம் தலைவர்கள் பாடல்போட்டியில் வெற்றிபெற்றவர்களுக்கு பரிசுகள் வழங்கினர். மேலும் சங்கரநயினர்கோவில் திரு C. S. மகாதேவ சாஸ்திரி அவர்கள் "திருப்பாவை" பற்றியும் செங்கோட்டை திரு S. P. அண்ணவி ராமகிருஷ்ணன் அவர்கள் "திருவெம்பாவை" பற்றியும் அழகாக சொற்பொழிவாற்றினர்கள். நன்றி நவிலலுடன் விழா இனிது முடிவடைந்தது. நிர்வாகஸ்தர்கள் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்தி வைத்தார்கள்.

69 மதுரை : *5—1—71* செவ்வாய்க்கிழமையன்று தல்லாகுள்ளம் ஸ்ரீ பிரசன்ன வெங்கடாஜலபதி கோவிலில் (ஸ்ரீ கள்ளழகர் தேவஸ்தானம், அழகர் கோவில்) திருப்பாவை— திருவெம்பாவை மாநாடு சென்னை அறநிலைய இலாகா, ஆணையர் திரு K. S. நரசிம்மமுதலியார் B. A , B L., I. A. S. அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. அவ்வமயம் மதுரை, அனுப்பானடி, தர்மகர்த்தா குழுத்தலைவர் திரு V. P. L. பெருமாள் நாயுடு வரவேற்புரை வாசித்தளித்தார். மதுரை, இந்து அறநிலைய பாதுகாப்புத்துறை துணை ஆணையர் திருM. சூரியராஜ் B. A., B. L., அவர்கள் சிறப்புரையாற்றினர்கள். ஸ்ரீ கள்ளழகர் தேவஸ்தானதர்மகர்த்தா திரு M. சுப்ரமண்யம் அவர்கள் பாவைப்போட்டியில் கலந்துகொண்டு வெற்றிபெற்ற குழந்தைகளுக்கு பரிசுகள் வழங்கினர். மதுரை, இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை. தனி அலுவலர் திரு R. ரெங்கசாமி B. Sc., B. L., '' திருப்பாவை '' பற்றியும், மதுரை மருத்துவக் கல்லூரி Dr. A. வரதராஜசுந்தரம் '' திருவெம்பாவை '' பற்றியும் மதுரை டோக் பெருமாட்டி கல்லூரி தமிழ் விரிவுரையாளர் திருமதி ரகுபதி சுவாமிநாதன் M. A., அவர்கள் ''திருப்பாவை'' பற்றியும் மதுரை கிழவாணி நகரவை மகளிர் உயர்நிலைப்பள்ளி தமிழாசிரியை திருமதி புலவர் இராசம் மரகதம் அவர்கள் '' பாவையும் பாவையரும் '' என்பது பற்றியும்



மதுரை தல்லாகுளம்

சத்சபை மாதர் பஜனை மண்டலி

நடத்திய பாவை நோன்பு விழா.

திருப்பாவை ரத்ன ஸ்ரீமதி ராசம்மாள் சுந்தரராஜன் அவர்கள் '' பக்தியும் பண்பாடும் '' என்பது பற்றியும் அழகாக சொற்பொழிவாற்றினர்கள். ஸ்ரீ கள்ளழகர் தேவஸ்தான தர்மகர்த்தா திரு M. K செல்லச்சாமி அவர்கள் நன்றிகூற விழா இனிது முடிவடைந்தது. ஸ்ரீ கள்ளழகர் தேவஸ்தான நிர்வாக அதிகாரி திரு E. பிச்சையா B A , அவர்கள் தர்மகர்த்தா குழுத்தலைவர் திரு V. P. L பெருமாள் நாயுடு (அனுப்பானடி) தர்மகர்த்தாக்கள் திரு M. K. செல்லச்சாமி, கள்ளந்திரி திரு M. சுப்ரமண்யம் (மாலைக் கோனர் குமாரர்) மதுரை திரு A. வெள்ளைச்சாமி, மாடக்குளம், திரு L. N. S ராஜா (காமதேனு சோடா பாக்டரி, மதுரை ) ஆகியோர் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்திவைத்தார்கள்.

70 தேனி, விருதுநகர் பேட்டை : *10—1—71* ஞாயிற்றுக்கிழமையன்று ஸ்ரீ வரசித்தி விநாயகர் திருக்கோவில் அலங்காரப் பந்தலில் பாவைவிழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. விழாவிற்கு தேனி திரு M. T. சம்பந்தம்பிள்ளை அவர்கள் தலைமைதாங்கினர்கள். பெரியகுளம் புலவர் திரு வி. சிவக்கொழுந்து அவர்கள் '' திருவெம்பாவை '' என்னும் பொருள்பற்றியும், பெரியகுளம் புலவர் திரு மு. இராசரெத்தினம் அவர்கள் '' திருப்பாவை '' என்னும் பொருள்பற்றியும் அரிய சொல்விருந்தளித்தார்கள். சென்ற புரட்டாசி மாதம் இத் திருக்கோவிலில் பத்துநாட்கள் மிகச் சிறப்பாக நடைபெற்ற நவராத்திரி விழாவின் போது

" ஓம் வரசித்தி விநாயக நம " என்னும் திருநாமத்தை அதிகமாக எழுதிய மூவர்க்கு கம்பம் T. V. S. மேனேஜர் திரு V. ரமணி அவர்கள் வழங்கி சொற்பொழிவாற்றினர்கள். பாவைப் போட்டியில் வென்றவர்கட்கு ஸ்ரீ காஞ்சி சங்கராச்சாரிய சுவாமிகள் அனுப்பியருளிய வெள்ளிக்காசுகளும், திருக்கோவிலின் சார்பான பரிசுகளும்தேனி V. லட்சுமணன் அவர்களால் வழங்கப்பட்டன. பாவை நடனங்கள் ஆடிய மாணவியர்க்கு தேனி திரு M. கோவிந்தசாமி செட்டியார் அவர்கள் பரிசு வழங்கினர்கள். நன்றி நவிலலுடன் விழா இனிது முடிவடைந்தது. மேற்படி ஆலய தர்மகர்த்தா விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளும் செயது விழாவை மிகவும் நல்லமுறையில் நடத்திவைத்தார்கள்.

71 திருச்செந்தூர் : 8—1—71 வெள்ளிக்கிழமையன்று ஸ்ரீ சுப்ரமண்ய சுவாமி தேவஸ்தானத்தில் திருப்பாவை — திருவெம்பாவை மாநாடு ஷை கோவில் வசந்த மண்டபத்தில் மதுரை இந்துசமய அறநிலைய ஆட்சித்துறை துணைஆணையர் திரு எம். சூரியராஜ் B. A. B. L. அவர்கள் சீரிய தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. திருச்செந்தூர் ஸ்ரீ சுப்ரமணிய சுவாமி தேவஸ்தானம் தர்மகர்த்தர் குழுத்தலைவர் திரு சிவ. இராம. அ. நடராஜ முதலியார் அவர்கள் வரவேற்புரை வழங்கினர். திருநெல்வேலி, வழக்கறிஞர் திரு கே. பட்சிராஜன் பி. ஏ., பி. எல்., அவர்கள் " ஒழியா உறவு " என்னும் பொருள்பற்றியும். அம்பாசமுத்திரம், இந்து சமய பரப்புனர் திரு டி. எம். பூதலிங்கம் அவர்கள் " விண்ணுக் கொரு மருந்து " என்னும் பொருள்பற்றியும் அழகாக சொற்பொழிவாற்றினர்கள். தலைவர் அவர்கள் பாடல்போட்டியில் வெற்றிபெற்ற மாணவ, மாணவிபருக்கு பரிசுகள் வழங்கினர் கள். இவ்வாலய தர்மகர்த்தர் திரு ஆ. நல்லகண்ணு அவர்கள் நன்றி நவிலலுடன் விழா இனிது முடிவடைந்தது. ஆலய நிர்வாகிகள் விழாவிற்குவேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்லமுயையில் நடத்திவைத்தார்கள்.

72 சாத்தூர் : 10—1—71 ஞாயிற்றுக்கிழமையன்று ஸ்ரீ வெங்கடாஜலபதி ஆலயத்தில் திருப்பாவை — திருவெம்பாவை விழா மதுரை அறநிலைய ஆட்சித்துறை துணை ஆணையர் உயர்திரு M. சூர்யராஜ் B. A., B. L.. அவர்கள் தலைமையில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. தர்மகர்த்தா குழுத்தலைவர் திரு V. S. தியாகராஜன் செட்டியார் அவர்கள் வரவேற்புரை வழங்கினர். தலைவர் முன்னுரைக்குப் பிறகு சாத்தூர் சப்மேஜிஸ்ட்ரேட் உயர்திரு M மீனாக்ஷிசுந்தரம் B. A., B L., அவர்கள் சாத்தூர் அஸிஸ்டெண்ட் சர்ஜன் உயர்திரு A. கொண்டல்சாமி அவர்கள் சாத்தூர் அறநிலைய பிரசாரகர் திரு V. G. ஸ்ரீனிவாச அய்யங்கார் அவர்கள் ஆகியோர் அழகாக சொற்பொழிவாற்றினர்கள். மாணவ, மாணவி கள் பேச்சுப்போட்டி நடைபெற்றது. மதுரை, ராமநாதபுரம் மாவட்டம் அறநிலைய ஆட்சித் துறை உதவி ஆணையர் உயர்திரு P. ஸ்ரீனிவாஸன் அவர்கள் பரிசுகள் வழங்கினர். நன்றி நவிலலுடன் விழா இனிது முடிவடைந்தது. நிர்வாக அதிகாரி திரு A. நாராயணசாமி தர்மகர்த்தா குழுத்தலைவர் திரு V. S. தியாகராஜன் செட்டியார், தர்மகர்த்தாக்கள் திரு S. S. P. சண்முக நாடார், திரு R. ராமசாமி ஆகியோர் இவ்விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்லமுறையில் நடத்திவைத்தார்கள்.

73 பொள்ளாச்சி; 9—1—71 சனிக்கிழமையன்று தேவனும்பாளையம் ஸ்ரீ மாரியம்மன் தேவஸ்தானத்தில் " திருப்பாவை — திருவெம்பாவை " மாநாடு மிகச் சிறப் பாக நடைபெற்றது. அவ்வமயம் பொள்ளாச்சி நகராண்மைக்கழக பெண்கள் உயர்நிலைப் பள்ளி ஆசிரியர் திருமதி ப. சரஸ்வதி B.A., B.T., அவர்கள் தலைமைதாங்கி "திருப்பாவை" எனும் பொருள்பற்றி அழகாக விரிவுரையாற்றினர்கள். பொள்ளாச்சி. நகராண்மைக் கழக ஆண்கள் உயர்நிலைப்பள்ளி ஆசிரியர் வித்வான் திரு M பார்த்தசாரதி " திருவெம்பாவை " எனும் பொருள் பற்றியும் அழகாக சொற்பொழிவாற்றினர்கள். பாவைப் போட்டியில்

வெற்றிபெற்ற குழந்தைகளுக்கு பரிசுகள் வழங்கப்பட்டது. நன்றி நவிலலுடன் விழா இனிது முடிவடைந்தது. நிர்வாக அதிகாரி திரு K. R. சுப்பிரமண்யன் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்லமுறையில் நடத்திவைத்தார்கள்.

74 தென்சேரிமலை 10-1-71 ஞாயிற்றுக்கிழமையன்று ஸ்ரீ மந்திரகிரி வேலாயுத சுவாமி தேவஸ்தான திருகல்யாண மண்டபத்தில் 'திருப்பாவை திருவெம்பாவை' மாநாடு திருப்பணி கமிட்டித் தலைவர் திரு ஊ. ச. ராமசாமி செட்டியார் அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. அவ்வமயம் மலையடிப்பாளையம், அரசினர் உயர்நிலைப்பள்ளி முதனிலை தமிழாசிரியர் திரு மு. சதாசிவம் சொற்பொழிவாற்றி விழாவை சிறப்பித்து வைத்தார்கள். திருப்பணிக் கமிட்டி பொக்கிஷதார் திரு கா. ரெங்கசாமிக் கவுண்டர் பாவைப் போட்டியில் வெற்றிபெற்ற குழந்தைகளுக்கு பரிசுகள் வழங்கினர். நிர்வாக அதிகாரி திரு K. R. சுப்பிரமண்யன், தர்மகர்த்தாக்கள் திரு M. P. முத்துக்கருப்பண்ணசாமிக்கவுண்டர், திரு K. இரங்கசாமி கவுண்டர் ஆகியோர் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்திவைத்தார்கள்.

75 பழனி: 10-1-71 ஞாயிற்றுக்கிழமையன்று ஸ்ரீ தண்டாயுதபாணி சுவாமி தேவஸ்தானத்தில் திருப்பாவை-திருவெம்பாவை மாநாடு அறங்காவற் குழுத்தலைவர் திரு G. சின்னதுரை அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. அதுசமயம் நிர்வாக அதிகாரி திரு S. ரத்தினம் B. A. B. T., அவர்கள் எல்லோரையும் வரவேற்றார்கள். அதுபோது திருப்பாவை-திருவெம்பாவைச் சொற்பொழிவு நடத்திய அறிஞர்கள் பெயர்: (1) பழனி, ஸ்ரீ பழனியாண்டவர் இந்திய பண்பாட்டுக் கல்லூரி முதல்வர் திரு T. S. R, ராமதாஸ் M. A., அவர்கள் (2) திருமதி N. சரோஜினிதேவி M. A. அவர்கள், முதல்வர் ஸ்ரீ பழனியாண்டவர் மகளிர் கலைக்கல்லூரி, பழனி. (3) பழனி, பழனியாண்டவர் செந்தமிழ்க்கல்லூரி முதல்வர் திருமதி வித்வான் T. சேதுபதி M. A. அவர்கள். (4) திரு. A. பரிமணம் M. A., M. Litt., அவர்கள் (பேராசிரியர், தமிழ்பிரிவு, ஸ்ரீ பழனி ஆண்டவர் இந்தியப் பண்பாட்டுக் கல்லூரி, பழனி) (5) திரு R. கிருஷ்ணமூர்த்தி M A. B. Ed., அவர்கள் (தமிழ் விரிவுரையாளர் ஸ்ரீ பழனியாண்டவர் கலைக்கல்லூரி-பழனி) (6) திரு M. கோபால் M. Com. அவர்கள் (விரிவுரையாளர், ஸ்ரீ பழனியாண்டவர் கலைக்கல்லூரி-பழனி) ஆகியோர். தலைவர் அவர்கள்



பழனி

ஸ்ரீ தண்டாயுதபாணி சுவாமி தேவஸ்தானம்

பாவை விழா.



பழனி

ஸ்ரீ தண்டாயுதபாணிசுவாமி தேவஸ்தானத்தில்

நடைபெற்ற பாவை விழா

பாவை பாடல் போட்டியில் வெற்றிபெற்ற குழந்தைகளுக்கு பரிசுகள் வழங்கினர். நன்றி நவிலலுடன் விழா இனிது முடிவடைந்தது. நிர்வாக அதிகாரி திரு S. ரத்தினம், B. A. B T., அவர்களும் ஏனைய அறங்காவலர்களும், அறங்காவலர் குழுத் தலைவரும் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்லமுறையில் நடத்தி வைத்தார்கள்.

76 மதுரை: *14—1—71* வியாழக்கிழமையன்று வடக்குப் பெருமாள் மேஸ்திரி வீதியில் உள்ள ஸ்ரீ ஆண்டாள் திருப்பாவை-திருவெம்பாவை இலவச இசைப்பள்ளியின் சார்பில் 15 வது ஆண்டு திருப்பாவை-திருவெம்பாவை விழா மிகச்சிறப்பாக நடைபெற்றது. அது சமயம் மதுரை ஸ்ரீமீனாக்ஷி சுந்தரேஸ்வரர் ஆலய நிர்வாகஅதிகாரி திருS. திருமலையப்பன் பி. ஏ. பி. எல்., அவர்கள் தலைமை தாங்கி விழாவை மிகச் சிறப்பாக நடத்தி வைத்தார்கள். திருமதி சுந்தரி சூரியநாராயணன் பாவைப்போட்டியில் வெற்றி பெற்ற குழந்தைகளுக்கு

மதுரை

திருப்பாவை இசைப்பள்ளியின் சார்பில்

நடைபெற்ற பாவை விழாவில்

கலந்து கொண்டவர்கள்.



147 சுசீந்திரம்: 9—2—71 செவ்வாய்க்கிழமையன்று பாவை விழாக்குழுவின் சார்பில் ஸ்ரீ தாணுமாலயமூர்த்தி சுவாமி தேவஸ்தானத்தில் 6-ம் ஆண்டு "பாவை நிறைவு விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. கன்யாகுமரி (தேவஸ்வம்) அவ்வமயம் குழுவின் தலைவர் திரு டாக்டர் எஸ். நடேசன், B. Sc.,. M B., B. S., அவர்கள் பாவை மாநாட்டை திறந்துவைத்து நல்லாசி வழங்கினார்கள். தேவஸ்வம் போர்டு உறுப்பினர்களும் கலந்து கொண்டு சிறப்பித்தார்கள். திரு டாக்டர் கே. பத்மநாபன், பி. எஸ்ஸி , எம். பி., பி. எஸ்., அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கி ஸ்ரீ காஞ்சி காமகோடி ஸ்ரீ ஆசார்ய சுவாமிகள் வழங்கிய வெள்ளிக் காசுகளும் சிற்றாடைகளும் பரிசாக வழங்கினார்கள். கன்யாகுமரி மாவட்டம் தேவஸ்வம் குழுவின் செயலாளரும் இந்துசமய அறநிலைய ஆட்சித்துறை உதவி ஆணையாளருமான திரு T. வேணுகோபால், பி. ஏ. அவர்கள் நல்லுரையாற்றி பாவை விழா குழுவினரைச் சிறப்பித்தார்கள். திருவாவடுதுறை ஆதீன பிரசாரகர் சித்தாந்த செம்மணி, சைவபுலவர் திரு P. A. நடேசபிள்ளை அவர்கள் ஆசியுரையாற்றினார்கள். பாவை விழாக் குழுத் தலைவர், திரு சிவசுப்ரமண்யபிள்ளை அவர்கள் அறிக்கை வாசித்தார்கள். சுசீந்திரம் ஆசிரியர் வித்வான் திரு ஆ. அம்மமுத்துப்பிள்ளை "திருவெம்பாவை" எனும் பொருள் பற்றியும், இடலாக்குடி ஆசிரியர் வித்வான் திரு பிச்சைக்கண்ணு அவர்கள் "திருப்பாவை" என்னும் பொருள் பற்றியும், சுசீந்திரம் பள்ளிக்கூட ஆசிரியர் திரு ஏ. சிவசுப்பிரமணியபிள்ளை, B. A., L. T., அவர்கள் "இரு பாவைகள்" என்னும் பொருள்பற்றியும், திரு சிதம்பரதாணுப் பிள்ளை அவர்கள் "மார்கழி நோன்பு" எனும் பொருள் பற்றியும் அழகாக சொற்பொழி வாற்றினார்கள். திரு T. வேணுகோபால், பி. ஏ., அவர்கள் தேவார ஆசிரியர்களை சிறப்பித்தார்கள். திரு சு. கந்தசாமிபிள்ளை அவர்கள் நன்றி நவில விழா இனிது முடிவுற்றது. திருப்பனந்தாள் மடம் ஆசிரமம் திருமுறைப்பணியாளர் தேவார இசைமணி திரு டி. தம்பையா ஓதுவார் அவர்கள் "இருபாவை வாழ்து" பாடினார்கள். பாவை விழாக்குழுத் தலைவர் திரு சிவசுப்பிரமணியபிள்ளை அவர்களும், செயலாளர் திரு சு. கந்தசாமிபிள்ளை அவர்களும் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்தி வைத்தார்கள்.

148 திருநெல்வேலி: 7—1—71 வியாழக்கிழமையன்று நகர திருக்கோயில்கள், கட்டளைகள் சார்பாக பாவை விழா திருநெல்வேலி நகர், கீழ ரதவீதி சுவாமி தேர்ப்பக்கம் அமைந்துள்ள பந்தலில் தவத்திரு குன்றக்குடி அடிகளார் M. L. C. அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. அவ்வமயம் சுவாமி நெல்லையப்பர் திருக்கோயில் அறங்காவலர் குழுத்தலைவர் திரு எஸ். கல்யாணசுந்தரம்பிள்ளை அவர்கள் வரவேற்புரை வழங்கினார்கள். மதுரை இந்துசமய அறநிலைய துணை ஆணையாளர் திரு எம். சூரியராஜ், பி. ஏ., பி. எல். அவர்கள் பாவைப் பாடல் போட்டியில் வெற்றி பெற்ற மாணவ, மாணவிகளுக்குப் பரிசுகள் வழங்கினார்கள். நெல்லை மாவட்ட ஆட்சியாளரின் நேர்முக உதவியாளர் திரு ஆர். குப்புசாமி, பி. ஏ. அவர்கள் "பாவையின் சிறப்பு" என்பது பற்றியும் வழக்கறிஞர் திரு கே. பக்ஷிராஜன் B. A., B. L. அவர்கள் "திருப்பாவை" என்பது பற்றியும் திருநெல்வேலி ஜங்ஷன் அஞ்சல் அலுவலகம் திரு சி. சு. மணி பி. ஏ. அவர்கள் பாவை மணி மொழி என்பது பற்றியும் அழகாக சொற்பொழிவாற்றினார்கள். பாளையங்கோட்டை, ஸ்ரீ ராமசுவாமி கோவில் நிர்வாக அதிகாரி திரு ஜி. சங்கரநாராயணன் அவர்கள் நன்றிநவில விழா இனிது முடிவடைந்தது. திருநெல்வேலி சுவாமி நெல்லையப்பர் ஸ்ரீ காந்திமதி அம்பாள் திருக்கோயில் நிர்வாக அதிகாரி அவர்கள். திருநெல்வேலி பிள்ளையன் கட்டளைகள் நிர்வாகி அவர்கள் திருநெல்வேலிச் சந்திப்பு மேடை தளவாய் கட்டளைகள் நிர்வாகி அவர்கள், திருநெல்வேலி சந்திப்பு ஸ்ரீ வரதராஜபெருமாள் திருக்கோயில் நிர்வாகி அவர்கள்,

பாளையங்கோட்டை, ஸ்ரீ ராமசுவாமி திருக்கோயில் நிர்வாகி அவர்கள் ஆகியோர் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்திவைத்தார்கள்.

149 ஸ்ரீ வில்லிபுத்தூர்: 7—1—71 வியாழக்கிழமையன்று ஸ்ரீ நாச்சியார் தேவஸ்தானத்தில் திருப்பாவை-திருவெம்பாவை மாநாடு ஷ சன்னதி கல்யாண மண்டபத்தில் திரு ஆர். சந்திரன்பிள்ளை, பி. ஏ., பி. எல். அவர்கள் தலைமையில் மிகவும்சிறப்பாக நடைபெற்றது. அவ்வமயம் இந்து சமய பரப்புநர் திரு வி. ஜி ஸ்ரீனிவாசய்யங்கார் அவர்கள் திருப்பாவை—திருவெம்பாவை பற்றியும் அழகாக சொற்பொழிவாற்றினார்கள். தலைவரவர்கள் பாவைப் பாடல்போட்டியில் வெற்றிபெற்ற குழந்தைகளுக்கு பரிசுகள் வழங்கினார்கள். நன்றி நவிலலுடன் விழா இனிது முடிவடைந்தது. நிர்வாக அதிகாரி திரு P. கந்தசாமி, B. Sc., அவர்கள், தர்மகர்த்தர்கள் திரு வி. வெங்கடாசலமுதலியார் அவர்கள், திரு ஏ. சுப்பையாநாடாரவர்கள், திரு பெ. அழகுதேவர் ஆகியோர் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்லமுறையில் நடத்திவைத்தார்கள்.

150 சிக்கத்தம்பூர்: 12—1—71 கிழமையன்று ஸ்ரீ ராஜகோபாலசுவாமி சன்னதியில் திருப்பாவை—திருவெம்பாவை 2-வது ஆண்டு விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. அவ்வமயம் திருவண்ணாமலை ஆதீனகர்த்தரும், தமிழ்நாடு தெய்வீகப் பேரவைத் தலைவரும் ஆகிய தவத்திரு குன்றக்குடி அடிகளார் M. L. C. அவர்கள் தலைமை தாங்கி ஆண்டாளும், மணிவாசகரும் என்னும் பொருள் பற்றி சொற்பொழிவாற்றினார்கள். திருப்பாவை-திருவெம்பாவை போட்டியில் வெற்றி பெற்ற சிறுவர்களுக்கு பரிசுகள் வழங்கப்பட்டது, நன்றி நவிலலுடன் விழா இனிது முடிவுற்றது. ஏகாதசி வழிபாட்டு மன்றத்தார் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்லமுறையில் நடத்திவைத்தார்கள்.

151 கீழப்பூங்குடி: 11—1—71 திங்கட்கிழமையன்று அரசினர் உயர்நிலைப் பள்ளி தலைமை ஆசிரியர் திரு P. பழனியப்பன், பி. ஏ., பி. டி. அவர்கள் தலைமையில் திருப்பாவை—திருவெம்பாவை மாநாடு சிவன்கோவில் முன்பாக மிகச் சிறப்பாக நடைபெற்றது. கீழப்பூங்குடி ரேடியோப் புகழ் நாதசுர இசைமணி திரு முத்து அவர்கள் குழுவினரின் நாதசுர இசை நிகழ்ச்சி நடைபெற்றது. மதுரை, ஆதீஸ்வரி பிரிண்டர்ஸ் மானேஜர் திரு டி. ஆர். கிருஷ்ணமூர்த்தி அய்யங்கார் அவர்கள் வரவேற்புரை வழங்கினார்கள். பாவைகளில் மிகுதியும் வலியுறுத்தப்படுவது பக்தி நெறியே! பண்பு நெறியே! என்னும் பொருள்பற்றி பட்டிமன்றம் நிகழ்ச்சி நடைபெற்றது. அதுசமயம் கண்டரமாணிக்கம் ஸ்ரீ தண்டாயுதபாணி உயர்நிலைப்பள்ளி தலைமைத் தமிழாசிரியர் புலவர் திரு ந. வெங்கட்ராமன், கண்டரமாணிக்கம் ஜோதிடமணி, வித்வான் திரு நா. அனந்தகிருஷ்ண அய்யங்கார் அவர்கள், இளையாத்தக்குடி சிவார்ச்சனா பாஸ்கர, பாகவத ரத்தினம் திரு ப. சதாசிவக்குருக்கள், கீழப்பூங்குடி அரசினர் உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர் புலவர், திரு கூ. இலக்குமணன் ஆகியோர் ஷ பட்டிமன்ற நிகழ்ச்சியில் கலந்து கொண்டனர். திரு எஸ். ராமசாமிகனபாடிகள் அவர்கள் நன்றி நவில விழா இனிது முடிவடைந்தது. விழாக் குழுவினர் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்திவைத்தார்கள்.

152 திருமாணிகுழி: 27—12—70 ஞாயிற்றுக்கிழமையன்று மாணிக்கவரதர் ஆலயத்தில் அறநிலைய உதவி ஆணையர் திரு என். சுவாமிநாதன் B. A., B. L., அவர்கள்

தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. அவ்வமயம் மன்ற பொருளாளர் திரு ஏ. முத்துலிங்கம் அவர்கள் வரவேற்புரை வழங்கினர்கள். திரு ந. கருணாநந்தம் அவர்கள் "திருவெம்பாவை" என்னும் பொருள் பற்றியும், திரு மு. கலியபெருமாள் அவர்கள் "திருப்பாவை" என்னும் பொருள் பற்றியும், மற்றும் திரு அருளரசு மாசிலாமணி அவர்களும் மிக அழகாக சொற்பொழிவாற்றினர்கள். திரு என். சுவாமிநாதன், பி. ஏ., பி. எல்., அவர்கள் பாவைப் போட்டியில் கலந்துகொண்டு வெற்றி பெற்ற குழந்தைகளுக்குப் பரிசுகள் வழங்கினர். மன்றச் செயலாளர் திரு எஸ். வெங்கடசுப்பு அவர்கள் நன்றி நவில விழா இனிது முடிவுற்றது. வார வழிபாட்டு மன்றத்தாரும், கிராம வாசிகளும் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்திவைத்தார்கள்.

153 பரவை ஊர்மெச்சிக்குளம்: 16—12—70 புதன்கிழமையன்று ஸ்ரீ சிவசக்தி விநாயகப்பெருமான் திருப்பள்ளி எழுச்சியை முன்னிட்டு 5-வது ஆண்டு விழா இன்னிசை, பக்திப் பாடல் வழிபாடு முதலியன ஷ தேவஸ்தானத்தில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. ஸ்ரீ சிவசக்தி விநாயகர் கோவில் விழாக்குழுவினர்கள் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்திவைத்தார்கள்.

154 கோவைமாவட்டம் பல்லடம் வட்டம் மங்கலம் அஞ்சல் அய்யம்பாளையம்:– 10—1—71 ஞாயிற்றுகிழமையன்று ஸ்ரீ வாழைத்தோட்டத்து அய்யன் கோயிலில் திருப்பாவை திருவெம்பாவை மாநாடு பழனி, ஸ்ரீ பழனியாண்டவர் கலைக்கல்லூரி தமிழ் விரிவுரையாளர் திரு இர. கிருஷ்ணமூர்த்தி M. A. B. Ed., அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாக நடைப்பெற்றது. அவ்வமயம் பழனி நகராட்சி உயர்நிலைப்பள்ளி தமிழாசிரியர் புலவர் திரு மதுரகவி ராமானுஜம் அவர்கள் 'திருப்பள்ளியெழுச்சி' என்னும் பொருள் பற்றியும் கோபிச்செட்டிப்பாளையம் திருமதி S. S. ராஜலெட்சுமி சிவராமன் அவர்கள் "திருப்பாவை" என்னும் பொருள் பற்றியும், சாமிளாபுரம் ஸ்ரீ வாழைத் தோட்டத்து அய்யன் கோயில் தமிழாசிரியர் வித்வான் திரு குமாரஞான சம்பந்தர் அவர்கள் 'திருவெம்பாவை' பற்றியும் அழகாக சொற்பொழிவாற்றினர்கள். அறங்காவலர் குழுத்தலைவர் திரு. சோ. கு. பழனிசாமி அவர்கள் பாவைப் போட்டியில் வெற்றி பெற்ற மாணவ மாணவியர்களுக்குப் பரிசுகள் வழங்கினர். இரவு 7 மணி அளவில் சூலமங்கலம் சகோதரிகள் குழுவினரின் இன்னிசை நிகழ்ச்சி மிக சிறப்பாக நடைபெற்றது. இரவு 11 மணிக்கு மாயூரம் ஸ்ரீ கணநாதர் பொம்மை நாடக சபாவினரின் பொம்மலாட்ட நிகழ்ச்சி மிகச் சிறப்பாக நடைபெற்றது. நிர்வாக அதிகாரி திரு P. R. கோவிந்தராஜலு B. A. B. Com., அவர்களும் அறங்காவலர் குழுத்தலைவர் திரு சோ. கு. பழனிசாமி அவர்களும் மற்ற அறங்காவலர்களும் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்லமுறையில் நடத்திவைத்தார்கள்.

155 தர்மபுரிகோட்டை: 16—12—70 புதன்கிழமை முதல் 30 நாட்களும் ஸ்ரீ பரவாசுதேவ சுவாமி தேவஸ்தானத்தில் ஸ்ரீ ஆண்டாள் சன்னதியில் ஸ்ரீ குலசேகர ராமாநுஜ சபையாரால் 'திருப்பாவை பாராயணமும்' ஸ்ரீ மல்லிகார்ஜுன சுவாமி தேவஸ்தானத்தில் சன்மார்க்க சங்கத்தாரால் 'திருவெம்பாவை பாராயணமும்' மிக சிறப்பாக நடைபெற்றது. கோட்டை ஸ்ரீ பரவாசுதேவ ஸ்வாமி ஸ்ரீ மல்லிகார்ஜுன சுவாமி தேவஸ்தான தர்மகர்த்தா குழுவினர் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்திவைத்தார்கள்.

156 ரெட்டியார் சத்திரம்: 24—1—71 ஞாயிற்றுகிழமையன்று ஸ்ரீ கோபிநாத ஸ்வாமி தேவஸ்தானத்தில். பாவை மாநாடு திரு K. காசிம் M. A. அவர்கள் (Deputy Superintendent of police, Dindigul) தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. அவ்வமயம் அறங்காவலர் குழுத்தலைவர் திரு உ. சின்னச்சாமிபிள்ளை அவர்கள் வரவேற்புரை யாற்றினார்கள். பழனி, ஸ்ரீ பழனி ஆண்டவர் இந்தியப் பண்பாட்டுக்கல்லூரி முதல்வர் பேராசிரியர் திருT. S. R ராம்தாஸ்M. A. அவர்கள் 'திருப்பாவை' என்பதுபற்றியும், மதுரை நாவீரர் திரு R. அரங்கசாமி B. Sc. B. L., அவர்கள் 'இருப்பாவைகள்' என்பதுபற்றியும் திண்டுக்கல், நில ஆர்ஜித தாசில்தார் 'பிரவசனரத்னம்' திரு S. மீனாக்ஷிசுந்தரம் B. A. அவர்கள் 'ஸ்ரீ கண்ணன் பெருமை' என்பது பற்றியும், திண்டுக்கல், இந்துசமய அறநிலைய ஆட்சித் துறை, சமயப் பாப்புநர் திரு R. சுந்தரேசன் அவர்கள் 'பாவை விழா' என்பதுபற்றியும் அழகாகச் சொற்பொழிவாற்றினார்கள் பாவைப்போட்டியில் வெற்றிபெற்ற குழந்தைகளுக்கு பரிசுகள் வழங்கப்பட்டது. நன்றி நவிலலுடன் விழா இனிது முடிவுற்றது. நிர்வாக அதிகாரி திரு M. வீரு அவர்களும், அறங்காவலர் குழுத்தலைவர் திரு உ. சின்னசாமிப் பிள்ளை அவர்களும் ஏனைய அறங்காவலர்களும் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்லமுறையில் நடத்திவைத்தார்கள்.

157 உதகை: 16—12—70 முதல் தொடங்கி மார்கழிமீ பூராவும் திருப்பாவை திருவெம்பாவை 20வது ஆண்டு வைபவத்தில் உதகை நகர் பழைய அக்ரஹாரத்திலுள்ள ஸ்ரீ ராமானுஜ சித்தாந்த சபையில், திருப்பாவை, திருவெம்பாவை, திருப்பள்ளி யெழுச்சி பாராயணமும், அடியார்களால், திவ்யநாம பஜனையும் மிகச் சிறப்பாக நடைபெற்றது. உதகை ஸ்ரீ திருப்பாவை-திருவெம்பாவை செயற் குழுவினர்கள் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிகநல்லமுறையில் நடத்திவைத்தார்கள்

158 உடுமலைப்பேட்டை: 16—1—71 சனிக்கிழமையன்று ஸ்ரீ பிரசண்ட விநாயகர் கோயில் ஸ்ரீ சௌரிராஜ பெருமாள் கோயிலில் திருப்பாவை-திருவெம்பாவை 9ம் ஆண்டு பரிசளிப்பு விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. அவ்வமயம் உடுமலை நகராட்சி ஆணையாளர் திரு T. M. சிவகுருநாதன் B. A., அவர்கள் விழாவிற்கு தலைமை தாங்கினார்கள். பி வி கோவில் டிரஸ்டி திரு A S. குருநாதசாமி செட்டியார் அவர்கள் பாவைப் போட்டியில் வெற்றி பெற்ற குழந்தைகளுக்கு பரிசுகள் வழங்கினர். பாவை விழாகுழுத் தலைவர் திரு P. ஆறுமுக கவுண்டர் அவர்கள் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்தி வைத்தார்கள்.

159 சிதம்பரம்: 27-12-70 ஞாயிற்றுகிழமையன்று திருப்பாவை-திருவெம்பாவை திருமறை ஆறங்க 20வது மஹாநாடு சிதம்பரம் ஸ்ரீ ஸபாநாயகர்கோயில் ஆயிரங்கால்மண்டபத்தில் மிகச்சிறப்பாக நடைபெற்றது. அவ்வமயம் வ்யாகரண ந்யாய வேதாந்த மீமாம்ஸா சிரோமணி பண்டிதராஜா ஸ்ரீ ஸோமஸேது தீக்ஷிதர் அவர்கள் தலைமை தாங்கி விழாவை சிறப்பித்து வைத்தார். அண்ணாமலைபல்கலைக்கழகம், தமிழ்த்துறை துணைப் பேராசிரியர் திரு ஆ. ராமசாமி பிள்ளை M. A. L. T. M Litt., அவர்கள் மஹாநாட்டை ஆரம்பித்து வைத்தார்கள் சிதம்பரம் ஸ்ரீராமகிருஷ்ண உயர்நிலைப்பள்ளி ஸங்கீத ஆசிரியர் ஸங்கீதபூஷணம் எம்பார் ஸ்ரீ T.S. வரதாசாரியார் அவர்களும், ஸம்ஸ்கிருதவிமர்சகர் ஸாஹித்ய கர்த்தா ஸ்ரீ T. ராமலிங்க தீக்ஷிதர் M. A. M. Litt, அவர்கள் இறைவணக்கம் பாடினார்கள். அண்ணாமலைப் பல்கலைகழக ஸம்ஸ்க்ருத லெச்சரர் ஸ்ரீ S. ஸ்ரீனிவாஸசர்மா சிரோமணி B. O. L. அவர்கள் வரவேற்புரை வழங்கினார்கள். தலைவர் முன்னுரைக்குப்பின் அண்ணாமலைப்பல்கலைக்கழக தமிழ் விரிவுரையாளர் மஹாவித்வான் திரு ச. தண்டபாணி தேசிகர் அவர்கள் 'திருவெம்பாவை' என்னும் பொருள் பற்றியும் அண்ணாமலைப் பல்கலைக்கழக தமிழ்த்துறை துணைப் பேராசிரியர் டாக்டர்

திரு மு. கோவிந்தசாமி M. A. phd., அவர்கள் ' திருப்பாவை ' என்னும் பொருள்பற்றியும், சிதம்பரம் பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளி ஆசிரியர் ஸ்ரீ P. S. கிருஷ்ணமூர்த்தி சாஸ்த்ரிகள் அவர்கள் ' ஆரங்கம் ' என்பது பற்றியும் அழகாக சொற்பொழிவாற்றினர்கள். ஸாஹித்ய சிரோமணி ஸாஹித்ய துரீண ஸ்ரீ ராம தங்கசாமி தீக்ஷிதர் அவர்கள் நன்றி கூற விழா இனிது முடிவுற்றது. திருப்பாவை திருவெம்பாவை கமிட்டியார் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிகநல்லமுறையில் நடத்திவைத்தார்கள்.

160 தூத்துகுடி: 15—1—71 வெள்ளிக்கிழமையன்று தெப்பக்குளம் தெரு பஜனை மடம் ஸ்ரீ வேதாத்யனுநி ஸத்காலக்ஷேப சபாவின் ஆதரவின் கீழ் திருப்பாவை திருவெம்பாவை பாராயண நிறைவு விழா திருமதி C. R. சாரதாம்பாள் அவர்கள் தலைமையின் கீழ் மிகச் சிறப்பாக நடைபெற்றது. ஸ்ரீ ஆச்சாரிய சுவாமிகளின் ஆசிச்செய்தி வாசிக்கப் பட்டது. தலைவர் அவர்கள் திருப்பாவை—திருவெம்பாவை முக்கியத்துவத்தை எடுத்துக் கூறி பாராயணத்தின் அவசியத்தை மக்கள் நலனைக் கருதி ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி வலியுறுத்தி வருவதையும் எடுத்துக் கூறினர்கள். ஆசிரியர் ஸ்ரீ R. சங்கர நாராயணய்யர் உரிய முறையில் கௌரவிக்கப்பட்டார். பாவைப் பாசுரங்களை ஒப்புவித்த குழந்தைகளுக்கு ஸ்ரீ அம்பாள் வெள்ளிக்காசுகள் அளிக்கப்பட்டன. இறுதியில் தலைவர் முடிவுரைக்குப்பின் ஸ்ரீ R. லக்ஷ்மணய்யர் அவர்கள் ஸ்ரீ ஆச்சார்யாள் அவர்களுக்கும், மாயூரம் திருப்பாவை மத்திய குழுவினருக்கும் நன்றி கூறினர்கள். நன்றி நவிலலுடன் விழா இனிது முடிவடைந்தது திரு R. சங்கரநாராயணன் அவர்கள் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்திவைத்தார்கள்.

161 ராஜ்கங்பூர் (ஒரிஸா): 7—3—71 ஞாயிற்றுக்கிழமையன்று ஸ்ரீ பாரதியின் ஆதரவில் திரு A. R. கிருஷ்ண்மூர்த்தி அவர்களின் தலைமையில் திருப்பாவை—திருவெம் பாவை 3-வது மகாநாடு வழக்கம்போல் விமரிசையாகவும், வெகுசிறப்பாகவும் நடைபெற்றது முதலில் விழா இறைவணக்கத்துடன் இனிது துவக்கப்பட்டது. பிறகு ஸ்ரீ ஆச்சார்ய சுவாமிகள் ஆசிச்செய்திகள் படிக்கப்பட்டது. அதன்பிறகு பாவைப்பாடல்போட்டியில் வெற்றிபெற்ற குழந்தைகளுக்கு பரிசுகள் வழங்கப்பட்டது. மேலும் ஸ்ரீ ஆச்சார்ய சுவாமிகள் பிரசாதம் விழாவிற்கு வந்திருந்த அனைவருக்கும் வழங்கப்பட்டது. ஸ்ரீ கௌரி வல்லபன் அவர்கள் குழந்தைகள் யாவரும் பக்திப் பாடல்களைப் பயின்று தினந்தோறும் கடைப்பிடிக்க வேண்டிய



ஒரிஸா ராஜ்கங்பூரில்
பாவை விழாவில்-
பரிசுபெற்ற குழந்தைகள்.

ஒழுக்கநெறிகளைப் பற்றியும் குழந்தைகள் உள்ளத்தில் நன்கு பதியும் வண்ணம் வெகு சிறப்பாக எடுத்துரைத்தார்கள். இறுதியாக ஸ்ரீ A. ராமகிருஷ்ணன், நாராயணன் குழுவினரும் மற்றும் குழந்தைகளும் பாவை பாசுரங்களை யாவரும் பக்தி வெள்ளத்தில் திளைத்து மெய் உருகும்படி சிறப்பாகப் பாடினார்கள். பிறகு நன்றி நவிலலுடன் விழா இனிது முடிவுற்றது.

162 திருப்பதி : *14—1—71* அன்று திருப்பதி கல்சுரல் அஸோஸியேஷன் சார்பில் ஹோட்டல் பீமாஸ் மாடிப் பூங்கா அரங்கில் சங்கத்தலைவர் திரு பி. கே. விஜயராகவன் தலைமையில் பாவை விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. திரு டி. ஜி. அனந்த சுப்ரமணியன் பாவை வகுப்புகள் குறித்த அறிக்கையைப் படித்தார். திருவேங்கடவன் பல்கலைக்கழகத் தமிழ்த்துறை ரீடர் திரு ஜி தாமோதரன் அவர்கள் சிறப்புரை நிகழ்த்தினார்கள். பாவை வகுப்புகளில் பயிற்சி பெற்ற குழந்தைகள் பாவைப் பாடல்களைப் பாடினர். போட்டிகளில் பரிசு பெற்றோருக்கு பீமாஸ்க்ரூப் ஹோட்டல்களின் அதிபரும் முனிசபல் கவுன்சிலருமான திரு கே. ஆர். வெங்கடாசலம் அய்யர் அவர்கள் பரிசுகளையும் சான்றிதழ்களையும் வழங்கினார்.



திருப்பதி கலாசார சங்கத்தில்

14—1—71 அன்று நடைபெற்ற பாவை விழாவில்

திரு K. R. வெங்கடாசலம் ஐயர் பரிசு வழங்குகிறார்

திருப்பதி கலாசார சங்கத்தில்

14—1—71 அன்று நடைபெற்ற பாவை விழாவில்

திரு டி. ஜி. அனந்த சுப்பிரமணியன்,

பாவை வகுப்பு ஆசிரியர் கௌரவிக்கப்படுகிறார்.



பாவை வகுப்புகளைச் சிறப்புடன் நடத்தி வரும் திரு டிஜி. அனந்தசுப்ரமணியன் அவர்களும் கௌரவிக்கப்பட்டார். குமாரி பி. கே. இந்திராணி திரு டி சாயிராமன் ஆகியோரின் இன்னிசைக் கச்சேரிகள் நடைபெற்றன. சங்கத்தின் செயற்குழு உறுப்பினர் திரு டி. ஆர். தீனதயாளு நன்றி நவின்றார். இணைச் செயலர் திரு அ. நடராஜன் மற்றும் அங்கத்தினர்கள் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்தி வைத்தார்கள்.

163. அலகாபாத்: தாராகஞ் சிவ மடத்தில் திருப்பாவை திருவெம்பாவை வைபவம் பிரயாகை பஜனை சமாஜின் தாராகஞ் ஆதரவின் கீழ் சென்ற 20—12—70, 27—12—70, 3—1—71, 10—1—71 ஆகிய தேதிகளில் பிரதி ஞாயிறு தோறும் திருப்பாவை-திருவெம்பாவை உத்ஸவம் மிகச் சிறப்பாக நடைபெற்றது. 20—12—70 அன்று சிவ மடத்தில் தாராகஞ் முதலில் திருப்பாவை, திருவெம்பாவை பாட்டுகளை எல்லா ஆஸ்திகர்களும் கோஷ்டி கானம் செய்த பிறகு ஸ்ரீ V. S. ரெங்கநாதாச்சாரியார் (பிரெபஸர் அலகாபாத் யுனிவர்சிடி) அவர்களால் திருப்பாவையின் முக்கியத்துவம் பற்றியும். ஸ்ரீ பகவானுடைய பரமவியூகம், விபவம், அர்ச்சாவதாரம், அந்தர்யாமி முதலியவை பற்றியும் விரிவாக எடுத்துரைத்தார்கள். சென்னையிலிருந்து வந்திருந்த Presidency college Dr. N. சுந்தரம் அவர்கள் பக்தி மார்க்கத்தையும், ஸ்ரீ ஆண்டாள் பக்தியை குறித்தும் சொல்லி அதன் மஹிமையையும் விளக்கினர்.

27—12—70 ஞாயிற்றுக்கிழமையன்று அலோபிராக் ஸ்ரீ விஸ்வநாதய்யர் இல்லம் அலஹாபாத், அன்று Dr. N. சுந்தரம் அவர்கள் ஸ்ரீ ஆண்டாளையும் ஸ்ரீ பக்த மீராவையும் பற்றி பிரவசனம் செய்து ஸ்ரீ ஆண்டாளின் திருப்பாவையையும். ஸ்ரீ மீரா செய்த பாடல்களையும் எடுத்துரைத்து ஒன்றுக்கொன்றின் ஒற்றுமையை விரிவாக எடுத்துரைத்து அவதார மஹிமையும், சொன்னர். கோஷ்டி கானமும் முன் ஞாயிறு போல் நடந்தது.

3—1—71 ஞாயிற்றுக்கிழமை இடம் சிவமடம். தாராகஞ் Prof. V. S. ரெங்கநாதாசாரியார் திருவெம்பாவைப் பற்றி விரிவாகச் சொன்னர். அதில் திருப்பாவைக்கும் திருவெம்பாவைக்கும் உள்ள ஒற்றுமையும் அவற்றின் மாஹாத்மியங்களையும் விளக்கிக் குறிப்பிட்டார்.

10—1—71 (ஞாயிறு) இடம் த்ரிதண்டி மடம் தாராகஞ் கோஷ்டிகானத்துக்கு பிறகு மடத்து ஸ்ரீ சங்கர்ஷணாச்சாரியார் ஸ்ரீ ஆண்டாளின் அவதார மஹிமையைப் பற்றி பேசினர் அதன் பிறகு Prof. V. S ரெங்கநாதாச்சாரியார் ஸ்ரீ ஆண்டாள் ஸ்ரீ ரெங்கநாத பகவானுடன் ஐக்யமான விஷயத்தைப் பற்றியும் கல்யாண வைபவத்தைப் பற்றியும் மிக அழகாகவும், தெளிவாகவும் விவரித்தார. கடைசியில் ஸ்ரீ ஆண்டாள் திருக்கல்யாண உத்ஸவம், நலங்கு, ஊஞ்சல் பாட்டுகளுடன் மிக உத்ஸாஹத்துடன் நடந்தது.

17—1—71 அன்று ஸ்ரீ தியாகராஜ ஆராதனை. இடம் த்ரிதண்டி மடத்தில் மாலை மணி 3 லிருந்து 5½ மணி வரையில் நடந்தது. Prof. V. S ரெங்கநாதாச்சாரியார் ஸ்ரீ தியாகராஜருடைய அவதார மஹிமையையும் அவர் இயற்றிய கீர்த்தனைகளைப் பற்றியும் விவரித்தார். இங்குள்ள உத்திரபிரதேசத்து ஆஸ்திகர்களும் புரிந்துகொள்ளும்படி ஹிந்தியிலும் பிரவசனம் செய்தார். முக்கியமாக ஸ்ரீ R. S. கோபாலன், ஸ்ரீ கணபதி. ஸ்ரீ சந்தானம். ஸ்ரீ நாகராஜன் அவர்கள் பாட்டுகளில் பங்கு கொண்டு எல்லா உற்சவங்களையும் சிறப்பாகச் செய்தனர். திரு சோமசுந்தரம் அவர்கள் 24-1-71 அன்று பஜனையில் பெரியவாளின் உத்திரவின் பேரில் அவர்களுடைய பிரஸாதமும் திருப்பாவை-திருவெம்பாவை ஸ்ரீ அம்பாள் காசும் அனுப்பியதை தெரிவித்து திருப்பாவை-திருவெம்பாவை எப்படி ஸ்ரீ பெரியவாள் விருத்தி செய்து

இருக்கிறார்கள் என்றும் சொல்லி அவைகளை ஆஸ்திகர்களுக்கு வழங்கினர். திரு T. சோம சுந்தரம் அவர்கள் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்தி வைததார்கள்

164. ஹைதராபாத் 14—1—71 அன்று ஸங்கர பக்த சபாவின் சார்பில் பாவை விழா மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. முதலில் இறை வணக்கத்திற்கு பிறகு South Central Railway ல் அக்கவுண்டெண்டாக பணி புரியும் ஸ்ரீ பார்த்தசாரதி அய்யங்கார் அவர்கள் திருப்பாவையைப் பற்றி விரிவாக உபன்யாஸம் செய்தார்கள். அதன்பிறகு ஆசாரியாளின் அருள் ஆசிகள் வாசித்தபிறகு உஸ்மானியா பல்கலைக்கழகத்தில் தமிழ் ஆசிரியராக பணிபுரியும் ஸ்ரீ முருகனார் அவர்கள் திருவெம்பாவையை பற்றி உறை நிகழ்த்தினர்கள். உறைக்கு பிறகு ஸ்ரீ மடத்தின் ஆஸ்தான வித்வான் ஸ்ரீ N. ராமகிருஷ்ணசாஸ்திரிகள் மூலம் பரிசு பெற்ற குழந்தைகளுக்கு சபையின் சார்பில் முதல் இரண்டு, மூன்றுவதாக புஸ்தக பரிசுகளும், வெள்ளிக்காசுகளும் வழங்கப்பட்டது. ஸ்ரீ ராமகிருஷ்ணசாஸ்திரிகளும் ஆச்சாரியாளுடைய ஆணைக்கிணங்கி நடத்தும் இந்த போட்டியின் நோக்கங்களை தெளிவு படுத்தி பேசினர். அன்று இரு வெள்ளிக்காசுகளை உபன்யாஸம் செய்த பேச்சாளர்களுக்கு வழங்கப்பட்டது. பாவை விழா மங்களகரமாக முடிந்தது. ஷை சபாவின் காரியதரிசி திரு S. வெங்கடேசன் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்தி வைத்தார்கள்.

165. மேட்டூர்: 14-1-71 தேதியன்று மேட்டூர்கெமிகல்ஸ் பஜனைசமாஜத்தில் திருப்பாவை—திருவெம்பாவைப் பாடல் போட்டிப் பரிசளிப்பு விழா மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. விழாவிற்கு மேட்டூர் கெமிக்கல்ஸ் காரியதரிசி உயர்திரு R. நடராஜன் அவர்கள் தலைமை வகித்து வெற்றிப் பெற்ற குழந்தைகளுக்கு ஸ்ரீ அம்பாள் காசுகளையும், பஜனை சமாஜத்தினர் ஆண்டுதோறும் வழங்கும் சிறப்புப் பரிசுகளையும் வழங்கினர். தலைவர் தம் உரையில் ஆண்டாளின் தூய அன்பை எடுத்துரைத்து, குழந்தைகள் இளவயதிலேயே பக்திநெறியில்நடக்க வேண்டும்என்றுகூறினர்.மேட்டூர் கெமிக்கல்ஸ் கெமிஸ்ட் உயர்திரு பொ. பால்வடிவு M. A. அவர்கள் "பாவை நோன்பு" என்ற தலைப்பில் சிறப்புரையாற்றினர்கள். கெமிக்கல்ஸ் எக்ஸைஸ் இன்ஸ்பெக்டர் திரு கோபாலகிருஷ்ணன், திரு பால்வடிவு, திருமதி சியாமளா, ராம்கோபால், ஆகியோர்கள் பாடல் போட்டிக்கு நீதிபதிகளாக இருந்தனர். குழந்தைகளின் மார்கழி மாத வீதி பஜனைக்கு பள்ளித் தலைமையாசிரியர் திரு பாலசுப்ரமணியன் ஏற்பாடுகள் செய்தார், திரு கா. வே. சுப்பிரமணியன் நன்றி நவில விழா ஆஞ்சநேய உத்ஸவத்துடன் இனிது முடிந்தது. திரு K. V. சுப்பிரமணியம் M. A. B. T. அவர்கள் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்தி வைத்தார்கள்.

166 மேட்டூர் அணை—தங்கமாபுரி பட்டணம் : 24—1—71 ஞாயிற்றுக்கிழமையன்று ஆரம்பப்பள்ளியில் பரிசளிப்பு விழா நடைபெற்றது. அவ்வமயம் பாவைப்போட்டியில் வெற்றி பெற்ற குழந்தைகளுக்கு ஸ்ரீ ஆச்சார்ய சுவாமிகள் பிரஸாதம், ஆசிச்செய்திகள் ஸ்ரீ அம்பாள் வெள்ளிக்காசுகள் முதலியன வழங்கப்பட்டன. பல பெற்றோர்கள் ஆசிரியர் ஆசிரியைகள், வந்திருந்து கூட்டத்தை சிறப்பித்து நடத்தி வைத்தார்கள். புலவர் ப. மாதவன் குமாரி S. பவானி அவர்களும் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்தி வைத்தார்கள்.

167 வடிவீஸ்வரம் பெரிய தெருவில் : (நாகர்கோயில் 3) L. I. C. Development Officer திரு N. ராமகிருஷ்ணஐயர் அவர்கள் முயற்சியால் பாவை மாநாடு மிகச் சிறப்பாக நடைபெற்றது. மாநாட்டிற்கு மாவட்ட ஆட்சியாளரின் மனைவி திருமதி சாந்தா ராமகிருஷ்ணன் தலைமை வகித்தார்கள். திருமதி ஔவை அழகப்பன் அவர்கள் திருப்பாவை — திருவெம்பாவை பாசுரங்களின் பொருள் பற்றி குழந்தைகளுக்கு எடுத்துரைத்தார்கள். திருமதி பத்மாவதி தேவியார் பாவை நோன்பு என்னும் பொருள் பற்றி உரையாற்றினார்கள். அதன் பின் திருமதி சாந்தா ராமகிருஷ்ணன் அம்பாளின் வெள்ளிக் காசுகளை குழந்தைகளுக்கு வழங்கினார்கள். குமாரி விஜயலெட்சுமி, B. Com. நன்றி நவின்றார்கள். அதன் பிறகு குழந்தைகளின் கலா நிகழ்ச்சியும் நடைபெற்றது. திரு N. ராமகிருஷ்ண ஐயர் அவர்கள் விழாவிற்கு



கன்னியாகுமரி ஜில்லா வடிவீஸ்வரத்தில்

நடைபெற்ற பாவை விழா நிகழ்ச்சி.



கன்னியாகுமரி ஜில்லா வடிவீஸ்வரத்தில்

நடைபெற்ற பாவை விழாவில் பரிசுகள் வழங்கப்படுகிறது.



கன்னியாகுமரி ஜில்லா வடிவீஸ்வரத்தில்

நடைபெற்ற பாவை விழா நிகழ்ச்சி.

வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்திவைத்தார்கள்.

168 சிறுவர்களுக்கான மதபோதனை வகுப்பும் (தினசரி கூட்டு ஸ்தோத்திரம்) வார வழிபாடும் கோவை 11-ம் சரகத்தைச் சார்ந்த சாயிபாபா காலனி வாஸி திரு லோ. நீலகண்ட அய்யரின் முயற்சியால் 5-வது ஆண்டு நிறைவு விழா காலனியில் உள்ள ஸ்ரீ காளியம்மன் கோயிலில் விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. 24—11—71ல் அதே இடத்தில் பாவை பரிசளிப்பு விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. அவ்வமயம் பாவைப் போட்டியில் வெற்றி பெற்ற குழந்தைகளுக்கு ஸ்ரீ ஆச்சாரிய சுவாமிகள் பிரஸாதம், மத சம்பந்தமான நூல்களும் வழங்கப்பட்டன. ஷை இரண்டு விழாக்களுக்கும் ஸ்தல அறநெறி குழுவின் அங்கத்தினரும், ஸ்ரீ பிரசன்ன விநாயக ஸேவா சங்கத்தின் தலைவருமான, தொழிலதிபர் திரு போரைகவுடர் தலைமை வகித்தார். ஸ்ரீ காளியம்மன்கோயில் நிர்வாகஸ்தர் திருமதி ஐயம்மா அம்மையவர்களால் பரிசுகள் வழங்கப்பட்டது. குழு அங்கத்தினர்களாகிய ஸர்வஸ்ரீ ஜம்பு நாதய்யா (ஓய்வுபெற்ற பள்ளி ஆசிரியர்) திரு துரையப்ப வாத்தியார் (ஸ்ரீ கோனிஅம்மன் கோவில் அர்ச்சகர்), திரு விஸ்வநாத சாஸ்திரியார்), காப்டன் V. K. பிரபு (டாக்டர்). திரு அருணாசலமய்யர் (ஓய்வுபெற்ற காவல்துறை அதிகாரி) திருமதி ஐய்யம்மா அம்மையார்

கோயம்புத்தூர் ஸ்ரீ சாயிபாபா காலனியில்

பாவை விழா.





கோவை சாயிபாபா காலனியில்
நடைபெற்ற பாவை விழாவில்
கலந்து கொண்ட குழந்தைகள்,



கோவை சாயிபாபா காலனியில்
பாவை விழாவில்
கலந்து கொண்ட குழந்தைகள்.

ஸ்ரீ காளிகோயில் நிர்வாகஸ்தர்) விழாக்கள் சிறப்புடன் நடைபெற பல வழிகளில் ஒத்துழைத்தனர். காலனி வாசிகளான ஸர்வ சிரஞ்சீவிகள் திரு நீ. கிருஷ்ணமூர்த்தி பி. ஏ., திரு நீ. ராமசந்திர சகோதரர்கள், திரு C. N. S, மணி, திரு வி, சங்கரன் ஆகியோரும் விழாவிற்கு வேண்டிய காரியங்களை கவனித்தார்கள். குழந்தைகளின் பாவை நடனம், கோபிகா நடனம் தீபக்கோலாட்டம் ஆகிய நிகழ்ச்சிகள் மிகச் சிறப்பாக நடைபெற்றது. குமாரி ஜெயஸ்ரீயும், திருமதி V. ஜயலெட்மி அம்மையாரும் திருப்பாவை-திருவெம்பாவை-திருப்பள்ளியெழுச்சி மூன்று பாவைக் கோவைகளையும் பிழையின்றி ஒப்புவித்து மேற்பார்வையாளர்களின் பாராட்டுதல்களை அடைந்து விசேஷ பரிசு ஸ்ரீ அம்பாள் வெள்ளிக் காசுகளை (பெரியது)யும் பெற்றார்கள். புதுமுறைப்படி பிடி அரிசி திட்டமும் செயல்பட்டு ஆண்டுமுடிவுவரை சேகரிக்கப்பட்ட 117 லிட்டர் அரிசியும் 42 ரூபாயும் ஸ்ரீ காளியம்மன் கோயிலுக்கும், ஸ்ரீ விநாயகர்கோயிலுக்கும் காணிக்கையாக செலுத்தப்பட்டன. நன்றி நவிலலுடன் விழா இனிது முடிந்தது. திரு லோ. நீலகண்டன் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்தி வைத்தார்கள்.

169 ஆழ்வார்குறிச்சி கீழக்கிராமம்: 26—1—71ம் தேதியன்று பெருமாள் கோவிலில் 8 வது திருப்பாவை திருவெம்பாவை மாநாடு மிகச் சிறப்பாக நடைபெற்றது. அச்சமயம் ஸ்ரீ பரமகல்யாணி உயர்நிலைப்பள்ளி தலைமை ஆசிரியர் திரு K. சுப்ரமண்யம் எம். ஏ. எல். டி., அவர்கள் தலைமை தாங்கி திருப்பாவை என்பது அனுபூதி உண்மை என்னும் கடைசிப் பாடலில், ஆண்டாளின் பிரார்த்தனை நிறைவு பெறுவதைக் காண்கிறோம் என்பதை விளக்கினார். வங்கக்கடல் கடையப்படுவதையும் கேசவனும் மாதவனும் திருமால் அங்கு உதிப்பதையும் கண்டு இந்த பாக்யம் நீங்கள் எல்லோரும் பெறலாம் என்று ஆண்டாள் ஆசீர்வதிப்பதாக திரு சுப்ரமண்யம் விளக்கினார். பேராசிரியர் L. ஜானகிராமன் எல்லோரையும் வரவேற்றார். ஸ்ரீ காமகோடி பீடாதிபதியின் விளக்கமான ஆசிச்செய்தியை தமிழ் வித்வான் ஸ்ரீ கிருஷ்ணய்யர் உருக்கமாகவும், விரிவாகவும் வாசித்தார்கள். திரு S. சேஷாத்ரி M. A., அவர்கள் உடலை வருத்தி நோம்பிருந்து பெறுதற்கரிய பேறெல்லாம் பெற ஆண்டாள் வழிகாட்டிச் சென்றாள் எனக்கூறினார். ஸ்ரீ ஆசாரிய சுவாமிகளின்

பிரஸாதமும், ஸ்ரீ அம்பாள் வெள்ளிக் காசுகளும் வழங்கப்பட்டது. பேராசிரியர் திரு S. இலக்குமி நாராயணன் அவர்கள் நன்றி நவின்றார்கள். கோயில் பட்டர் திரு ரெங்கநாத அய்யங்கார், தர்மகர்த்தா திரு கிருஷ்ணசங்கரய்யரும் விழாவிற்குவேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்தி வைத்தார்கள்.

170 சேலம் தாலுக்கா மல்லூர் : *15—1—71* ம் தேதி ஸ்ரீ முருகானந்த ஜோதிஷசாலை ஸ்ரீ M. V. பொன்னுசாமி அய்யர் அவர்கள் முயற்சியால் பாவை பரிசளிப்பு விழா மிகச்சிறப்பாக கொண்டாடப்பட்டது. மார்கழி மாதத்தில் பாவைப் பாடல்களை ஒப்புவித்த குழந்தைகளுக்கு ஸ்ரீ ஆச்சார்ய சுவாமிகள் அருளிய பிரஸாதம் ஸ்ரீஅம்பாள் வெள்ளிக்காசுகள் முதலியன வழங்கப்பட்டன. திரு M. V. பொன்னுசாமி அய்யர் அவர்கள் விழாவிற்கான எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்திவைத்தார்கள்.

*171* ஸ்ரீ காளஹஸ்தி: மார்கழி முழுவதும் ஸ்ரீ காளஹஸ்தீஸ்வர சன்னதியில் குழந்தைகளுக்கு பாவை வகுப்புக்கள் நடத்தப்பட்டது. சனி, ஞாயிறு மற்றும் விடுமுறை நாட்களிலும் வீதிவலம் நடத்தப்பட்டது. *13—1—71* போகியன்று காலை ஸ்ரீ ஆண்டாள் ஸ்ரீ ஆசார்யாள் உருவப்படங்களுடனும், திருப்பாவை புஸ்தகங்களும் எடுத்துக் கொண்டு ஊர்வலம் நடத்தப்பட்டது. பாவைப் போட்டி நடந்தபின் மாலை ஸ்ரீ காளஹஸ்தீஸ்வரர் சன்னதியில் குழந்தைகளுக்கு முத்தியாலுபேட்டை பஜனை கோஷ்டி ஸ்ரீ சிந்தாமணி அய்யங்கார் அவர்களால் பரிசுகள் வழங்கப்பட்டது. குழந்தைகள் ஆண்டாள், ராதை, கிருஷ்ணன் போன்ற அலங்காரம் செய்து நாமசங்கீர்த்தனம் செய்து விழா இனிது முடிந்தது. திரு G. காசிநாதன் அவர்கள் விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்லமுறையில் நடத்திவைத்தார்கள்.

172 திருச்சி: தேசிய கல்லூரி விடுதி மாணவர்கள். தலைவர் திரு ஸ்ரீனிவாஸன் அவர்கள் தலைமையில் டாக்டர் திரு கோபாலகிருஷ்ணன் மேற்பார்வையில் தினமும் பாடினார்கள். மார்கழி ஏகாதசியன்று பாவை சிறப்புகூட்டம் ஏற்பாடு செய்துஅதில் திரு ஆ. கிருஷ்ணன் அவர்கள் ‘பாவையும் வெம்பாவையும்’ எனும் தலைப்பில் பேசினார்கள். அது சமயம் திரு கோபாலகிருஷ்ணன் அவர்கள் “மார்கழித் திங்கள்” எனும் தலைப்பில் பேசினார். எல்லோருக்கும் இனிப்பு வழங்கப்பட்டது. மனப்பாடம் செய்தவர்கள் திரு சீனிவாஸன் (தலைவர்) திரு வெங்கடேசன் (செயலர் & பொருப்பாளர்) திரு ஆனந்தாழ்வார் பர்வதம், திலகம், ஆகியோர் மாணவ, மாணவிகள், விழாவிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விழாவை மிக நல்ல முறையில் நடத்திவைத்தார்கள்.

173 அறந்தாங்கி : பாவை விழா பள்ளித்துணை ஆய்வாளர் திரு வை. பக்கிரிசாமி செட்டியார் அவர்கள் முயற்சியால் நடைபெற்று குழந்தைகளுக்கு பரிசுகள் வழங்கப்பட்டன

174 பரமகுடி, திருப்பாவை திருவெம்பாவை பயிற்சிப் பள்ளியின் சார்பில் பாவை பரிசளிப்பு விழா நடைபெற்றது. காரியதரிசி திரு A. H. ராஜகோபாலன் முயற்சி எடுத்துக் கொண்டார். திறம்பட ஒப்புவித்த 32 மாணவ மாணவிகளுக்கு புஸ்தகங்களும் பரிசுகளும் வழங்கப்பட்டன.

175 பெங்களூர்-1: திருப்பாவை பாடசாலையின் 16ம் ஆண்டு பாடல்போட்டி மார்ச் 7 தேதி ஸ்ரீமதி அன்னவஸந்தி சங்கத்தில் வெகு சிறப்பாக நடந்தது. சுமார் 75 குழந்தைகள் போட்டியில் பங்கு கொண்டனர். திருS. வெங்கட்ராமன் தொழில் ஆலோசகர், கனரா பாங்க் அவர்கள் தலைமை தாங்கினர்கள். அவர் தமது தலைமை உரையில் ஸ்ரீமான் K. G. சீனிவாசனின் தன்னலமற்ற சேவையைப் பாராட்டினர். ஸ்ரீமதி வெங்கட்டராமன் அவர்கள் பரிசுகள் வழங்கினர். முன்னதாக திரு K. R. சீனிவாஸன் அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தி பாடசாலையின் ஆண்டு அறிக்கை வாசித்தார். ஸ்ரீமான் K.G. ஸ்ரீனிவாஸன் வந்தனோபசாரம் கூறினர்.

பின்வரும் குழந்தைகள் முதற்பரிசுபெற்றனர். அத்துடன் அவர்களுக்கு ரோலிங்ஷீல்டு தரப்பட்டது. சினியர் குமாரி G. துரைக்கண்ணு, ஜூனியர், சி R. ஸ்ரீதர். ஸப் ஜூனியர் சி. R. சுரேஷ். சென்ற 16—10—71 அன்று நமது திருப்பாவை பாடசாலையைச் சேர்ந்த சுமார் 40 குழந்தைகளை அழைத்துச்சென்று புதுப்பெரியவர்களின் முன்னிலையில் துளஸி ராமதாஸ் மடத்தில் ஆசாரிய சுவாமிகளுக்கு சில ஸ்தோத்ர பாடல் முதலியவைகளையும் திருப்பாவை திருவெம்பாவை திருப்பள்ளியெழுச்சி ஆகியவைகளையும் பற்றி சொன்னார்கள். ஸ்வாமிகள் மிகுந்த சந்தோஷமடைந்து ஆசி கூறிபிரசாதம் வழங்கினார்கள். இப்பாடசாலையை நிர்வஹித்துவரும் திரு K. R. சினிவாஸன் அவர்கள் ஊக்கத்தால் விழா நல்லமுறையில் நடைபெற்றது.

176 செகந்தராபாத்: சங்கர பக்தசபாவில் இவ்வாண்டு திருப்பாவை திருவெம்பாவை போட்டிகள் நடத்தப்பட்டன. திருப்பாவை திருவெம்பாவை ஒப்புவித்தல் போட்டியில் முதல், இரண்டாவது, மூன்றாவது பரிசு பெற்ற குழந்தைகளுக்கு திருப்பாவை திருவெம்பாவை விழா நடந்த தினத்தன்று பரிசுகள்வழங்கப்பட்டது. திரு A. V. சுப்ரமண்யம் 'திருப்பாவை" என்ற பொருள்பற்றியும் திருமுருகனர் "திருவெம்பாவை" என்ற பொருள்பற்றியும் உபந்யஸித்தார்கள். அன்று ஆசார்யாள் அனுக்கிரஹித்து அனுப்பிய காமாக்ஷி அம்மன் காசும் மற்ற பரிசும் பொருள்களும் குழந்தைகளுக்கு வழங்கப்பட்டது.

177 வாலாஜாபேட்டை: மங்களாம்பாள் பள்ளி 'காஞ்சி ஆச்சார்யாள் ஹாலில்' ஸ்ரீ இராமாயண ஸ்ரீனிவாஸன் அவர்கள் தலைமையில் 20—1—71 வெகு சிறப்பாக பாவை பரிசளிப்பு விழாநடைபெற்றது. தாய்லாந்து ஐ. நா. பணிபுரிந்து ஒய்வு பெற்ற S. V. சுவாமி அவர்களும் கல்கத்தா எலெட்ரிக் கார்ப்பரேஷனில் பணிபுரியும் S. நடேசன் அவர்களும் ஸ்ரீமதி இந்திராநடேசன் அவர்களும் பங்குகொண்டார்கள். செல்வி கலா நடேசன் பரிசுகள் (அம்பாள் காசுகள்) பாவை ஒப்புவித்த குழந்தைகட்கு வழங்கினர். பள்ளி நிர்வாகி T. முனுஸ்வாமி அய்யர் வரவேற்றார். T. M. வெங்கடராமன், (தலைமையாசிரியர்) நன்றிகூறினர்.

178 தஞ்சை: இறைவன் திருவருளால் குறிச்சித்தெரு கந்தன் செந்தமிழ்க் கழகத்தின் சார்பில் திருப்பாவை திருவெம்பாவை மாநாடு 11—1—71ல் தஞ்சை திரு புலவர் சொக்கலிங்கம் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. திரு ப. சி. அண்ணாமலை நாடார் அவர்கள் விழாவை துவக்கிவைத்தார்கள். புலவர் திரு வேல்சம்பந்தமூர்த்தி அவர்கள் 'நீங்காத செல்வம் நிறைந்தது' என்ற தலைப்பிலும் புலவர் திரு ப. சங்கரன் அவர்கள் 'எய்யாமற் காப்பாய்எமை, என்ற தலைப்பிலும் சொற்பெருக்காற்ற, திரு மு. கணபதியா பிள்ளை அவர்கள் நன்றியுரையுடன் நிறைவுற்றது.

## 1970-71 ம் வருஷம், மார்கழி மாதம் நடைபெற்ற விழா விபரங்கள்.

1. மகாநாடுகள் நடந்த இடங்கள் மொத்தம் — 178
2. திருப்பாவை-திருவெம்பாவை புஸ்தகங்கள் பெற்றுக்கொண்டு ஆரம்ப பள்ளிக்கூடங்கள் — 2700
3. பள்ளிக்கூடங்கள், பஜனை சங்கங்கள், திருக்கோயில்கள் இதர ஸ்தாபனங்கள் மூலமாக குழந்தைகளுக்கு வழங்கப் பாவை புத்தகங்கள் அனுப்பியது — 3½ லட்சம் பிரதிகள்
4. பாவை பாசுரங்களை மனப்பாடம் செய்த குழந்தைகளுக்கு பரிசாக வழங்க அனுப்பப்பட்ட ஸ்ரீ அம்பாள் வெள்ளிக்காசுகள்
   - பெரியது எண் — 31,000
   - சிறியது எண் — 5066

5 குழந்தைகளுக்குப் பரிசாசு வழங்க அனுப்பிய அருள்வாக்கு புத்தகங்கள் 5000

6 ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீ ஆச்சார்யஸ்வாமிகளின் ஆசிச் செய்தி அனுப்பியது 10000

7 இவ்வருடம் ஸ்ரீ அம்பாள் வெள்ளிக்காசுகள் அடியிற் கண்டவர்கள் தயாரித்துக்கொடுத்து உதவினர்கள்.

1 ஸ்ரீ ஸ்வாமிநாதஸ்வாமி தேவஸ்தானம், ஸ்வாமிமலை
2 ஸ்ரீ ஸ்ரீனிவாசப்பெருமாள் தேவஸ்தானம், நாச்சியார்கோவில்
3 ஸ்ரீ அக்னீஸ்வரஸ்வாமி தேவஸ்தானம், திருப்புகளூர்
4 ஸ்ரீ ஸப்தரிஷீஸ்வரஸ்வாமி கோவில், லால்குடி.
5 ஸ்ரீ தண்டாயுதபாணிஸ்வாமி தேவஸ்தானம், பழனி
6 ஸ்ரீ சுப்ரமண்யஸ்வாமி தேவஸ்தானம், திருசெந்தூர்
7 ஸ்ரீ மீனுக்ஷி சுந்தரேஸ்வரர் தேவஸ்தானம், மதுரை
8 ஸ்ரீ கள்ளழகர் தேவஸ்தானம், அழகர்கோவில்
9 ஸ்ரீ நாச்சியார் தேவஸ்தானம், ஸ்ரீவில்லிபுத்தூர்
10 ஸ்ரீ ராமனுதஸ்வாமி தேவஸ்தானம், இராமேஸ்வரம்
11 ஸ்ரீ திருமலேகுமாரசுவாமி தேவஸ்தானம், பன்மொழி
12 ஸ்ரீ சுப்ரமண்யஸ்வாமி தேவஸ்தானம், திருத்தணி
13 ஸ்ரீ ரெங்கனுதஸ்வாமி வகையரா தேவஸ்தானம், ஸ்ரீரங்கம்
14 ஸ்ரீ அகிலாண்டேஸ்வரி தேவஸ்தானம், திருவானேக்காவல்
15 ஸ்ரீ பங்காரு காமாக்ஷி அம்மன் கோவில், தஞ்சாவூர்
16 ஸ்ரீ ஹிருதய கமலநாதஸ்வாமிகோயில், வலிவலம்
17 ஸ்ரீ கோதண்டராமஸ்வாமிகோயில், பட்டீஸ்வரம்
18 ஸ்ரீ காசிவிஸ்வநாதகோவில், கும்பகோணம்
19 ஸ்ரீ ஞானபுரீஸ்வரர் கோயில், திருமெய்ஞானம்
20 ஸ்ரீ சித்தநாதஸ்வாமிகோவில், திருநறையூர்
21 ஸ்ரீ வரதாராஜப்பெருமாள் கோயில், உள்ளிக்கோட்டை
22 ஸ்ரீ ஆபத்சகாயேஸ்வரர்கோவில், ஆலங்குடி
23 தமிழ்நாடு தெய்வீகபேரவை, சென்னை
24 எம். எஸ். காலசந்தி கட்டளை, சிதம்பரம்
25 ஸ்ரீ அகோரசாஸ்திரிகள் தர்மஸ்தாபனம், மாயூரம்
26 திருப்பாவை-திருவெம்பாவை டிரஸ்டு, சிதம்பரம்
27 ஸ்ரீ கே. என். ஷண்முகசுந்தர முதலியார் டிரஸ்ட், சென்னை.

8 பாவை புத்தகங்கள் அச்சடித்து கொடுத்து உதவியவர்கள் :—

1 ஸ்ரீ காசி மடம், திருப்பனந்தாள்
2 ஸ்ரீ சுப்ரமண்யஸ்வாமிகோவில், திருச்செந்தூர்
3 ஸ்ரீ தியாகராஜஸ்வாமி கோவில், திருவாரூர்
4 ஸ்ரீ மீனுக்ஷி சுந்தரேஸ்வரர் கோவில், மதுரை
5 ஸ்ரீ திருமலேகுமாரஸ்வாமி கோவில், பன்மொழி
6 ஸ்ரீ தண்டாயுதபாணிஸ்வாமி கோவில், பழனி
7 ராமநாதபுரம் சமஸ்தான தேவஸ்தானங்கள்
8 சிவகங்கை சமஸ்தான தேவஸ்தானங்கள்
9 ஸ்ரீ சுவாமி நெல்லையப்பர் தேவஸ்தானம், திருநெல்வேலி
10 ஸ்ரீ கள்ளழகர் ஸ்வாமி தேவஸ்தானம், அழகர்கோவில்

11 ஸ்ரீ நாச்சியார் தேவஸ்தானம், ஸ்ரீவில்லிபுத்தூர்

12 ஸ்ரீதருமபுரம் ஆதீனம், தருமபுரம்.

இவை தவிர திருக்கோவில்களில் பாவை மகாநாடு நடந்த இடங்களில் அந்தந்த தேவஸ்தானங்களில் பாவை பாசுரங்களில் தேர்வுபெற்ற குழந்தைகளுக்கு பரிசாக பொருள்கள் வழங்கியிருக்கிறார்கள். சென்னை மெஸர்ஸ் பி. ஜி. பால் அண்டு கம்பெனியார்கள் இக்குழுவின் காரியங்களுக்கு வேண்டிய உதவிகளை செய்துக் கொடுத்து உதவியுள்ளார்கள்.

## Thiruppavai - Thiruvembavai Central Committee, Mayuram.

| Year | Expenditure Cash | T. T. Books Supplied | Sri Ambal Coins given |
|---|---|---|---|
| 1950-51 | 5803-78 | 14000 | — |
| 1951-52 | 14876-80 | 21000 | — |
| 1952-53 | 11223-12 | 69000 | — |
| 1953-54 | 5337-02 | 24700 | — |
| 1954-55 | 3078-03 | 32000 | — |
| 1955-56 | 3591-66 | 35000 | — |
| 1956-57 | 1669-00 | 27000 | — |
| 1957-58 | 2280-56 | 30000 | 4500 Silver coins<br>300 Gold coins |
| 1958-59 | 2579-80 | 47000 | 7000 Silver coins<br>500 Gold coins |
| 1959-60 | 3936-85 | 81000 | 7000 Silver coins<br>500 Gold coins |
| 1960-61 | 4100-86 | 99500 | 11200 Silver coins<br>1000 Gold coins |
| 1961-62 | 9403-86 | 130000 | 12000 Silver coins<br>1500 Silver Large |
| 1962-63 | 12172-36 | 220000 | 8900 Silver Large<br>8000 Silver Small |
| 1963-64 | 13000-00 | 240000 | 9947 Silver Large<br>7036 Silver Small |
| 1964-65 | 19252-47 | 350000 | 14000 Silver Large<br>10000 Silver Small |
| 1965-66 | 20667-57 | 350000 | 16000 Silver Large<br>10000 Silver Small |
| 1966-67 | 18322-63 | 350000 | 16200 Silver Large<br>11000 Silver Small |
| 1967-68 | 18937-24 | 350000 | 18000 Silver Large<br>11300 Silver Small |
| 1968-69 | 26021-63 | 350000 | 19000 Silver Large<br>13735 Silver Small |
| 1969-70 | 17013-58 | 350000 | 26800 Silver Large<br>11000 Silver Small |
| 1970-71 | 19820-00 | 350000 | 32400 Silver Large<br>7116 Silver Small |



## ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஜகத்குரு அவர்களின்

# வேண்டுகோள்.

காலையில் பல் துலக்கி நெற்றியில் திருநீர் அல்லது சிறிதளவு மண்ணுவது இட்டுக் கொண்டு சூரியனைப் பார்த்து, மூன்று தடவை, நமஸ்காரம் செய்யவேண்டும். (விழுந்து கும்பிட வேண்டும்) பிறகு ''ஹரோ ஹரா'' அல்லது ''ராம ராமா'' என்று கடவுள் நாமத்தை, கணக்கிட்டுக் கொண்டு, பதினேறுதரம் மனதில் ஜபிக்கவேண்டும். பிறகு ஒருதரம் நமஸ்காரம் செய்யவேண்டும். (விழுந்து கும்பிடவேண்டும்) இவ்விதம் சூரியனைப் பார்த்து அந்திப் பொழுதிலும் செய்யவேண்டும்.

இவ்விதமே இரு வேளைகளிலும் நமது ஆயுள் காலம்வரை ஜபிக்க வேண்டும்.

'ஐயமிட்டுண்' என்பது தமிழ் மூதாட்டியான ஔவையின் அருள் வாக்கு. இதை ஒவ்வொரு குடும்பமும் பின் பற்றுவது நல்லது. ஒவ்வொரு நாளும் சமயலுக்காக உலைப் பானையில் அரிசிபோடும்போது தர்மத்திற்கென்று ஒரு தனிப்பாத்திரத்தில் ஒருபிடி அரிசியும் ஒரு காசும் போட்டு வைக்கவேண்டும். வாரத்திற்கு ஒருதரம் இந்த அரிசியை வசூல் செய்து ஓர் இடத்தில் சேர்ப்பதற்கு ஏற்பாடு செய்யவேண்டும். இதற்காக ஒவ்வொரு தெருவிலும் அலலது வட்டத்திலும் ஒரு சங்கம் அமைத்துக் கொள்ளலாம்.

சேமிப்பு அரிசியை அந்தச் சங்கத்தின் மூலம் பக்கத்தில் உள்ள கோயிலில் கொடுத்துச் சமைத்துப் பகவானுக்கு நிவேதனம் செய்யவேண்டும். நிவேதனம் செய்த அந்த அன்னத்தை பட்டை போட்டு அந்த வட்டாரத்திலுள்ள ஏழை ஜனங்களுக்கு குறைந்த விலையில் 10 காசு வீதம் விற்கவேண்டும். இதில் கிடைக்கும் தொகையை விறகு வாங்குவதற்கு அல்லது கோயிலில் சமையல் செய்பவருக்கு ஊதியம் கொடுப்பதற்கு பயன் படுத்திக் கொள்ளலாம்.

இந்த தர்மத்தைக் கடைபிடித்தால் ஏழை ஜனங்களுக்கு உபகாரமாக இருக்கும். பகவானுக்கு நிவேதனம் செய்த அன்னத்தை உட்கொள்வது மனதில் நல்ல எண்ணங்களைத் தோன்றச் செய்யும். இந்த தர்மத்தினல் தர்மம் செய்பவர்கள், அதைப் பெருகிறவர்கள் இருவருமே கடவுளின் கிருபைக்குப் பாத்திரர்களாகிருர்கள்.

ஊர்கூடித் தேர் இழுப்பது போல் எல்லாரும் இதைக் கடைபிடிக்க ஆரம்பித்தால் ஏழை ஜனங்களுக்குப் பேருதவியாக இருக்கும். பசித்தவனுக்கு உணவளிப்பதைவிட வேறு சிறந்த தர்மம் ஏது? நாம் கொடுப்பது பிடிஅரிசி. அதில் எவ்வளவோ பேர் பலன்பெறுகிருர்கள்.

# மார்கழி மாதம் வரப்போகுதையே !

1 மார்கழி மாதத்தில் அதிகாலையில் குளிர்ந்த நீரில் நீராடு.

2 தனுர்மாத பூஜையைச் செய்.

3 அப்படி பூஜை செய்வதற்கு முடியாமல் இருந்தால் பஜனைசெய்துகொண்டு வீதிப் பிரதக்ஷிணம் செய்.

4 அதுவும் முடியாவிட்டால் கோவிலில் தனுர்மாத பூஜையையாவது தர்சனம் செய்.

5 அதுவும் முடியாவிட்டால் எவர் வீட்டிலாவது தனுர்மாத பூஜை செய்தால் அங்கேபோய் ஸ்வாமியை நமஸ்கரித்து வா.

அதிகாலையில் மனது தெளிவாயிருக்கும். "வைகறையில் துயிலெழு" என்றார் தமிழ்த்தாய் ஔவையார். அந்தத்தெளிவான காலையில் மனதையும், வாக்கையும், உடலையும் ஈசனுக்கு அர்ப்பணம் செய்வோமானால், இருபத்திநான்கு மணிநேரமும் இடைவிடாது ஈச்வரத்யானம் செய்தால் எந்தபயனோஅவ்வளவு அருள் அரைமணிநேரத்தில் ஹிருதயத்தில் நிறைந்துக் கிடக்கும். மனதிலுள்ள கெட்ட வாஸனைகள் அகலும். செய்த பாபங்கள் பஜனை செய்வதால் அழியும். பஜனை செய்துகொண்டு ஊர்வலம் வருவதால் உடம்பினால் செய்த அபசாரங்கள் நீங்கும்.

மாணிக்கவாசகரின் திருவெம்பாவையும், ஆண்டாளின் திருப்பாவையும், மார்கழி நீராடலையே சிறப்பிக்கின்றன.

நமக்கு 12 மணி நேரம் பகல், 12 மணி நேரம் இரவு. வடக்கு துருவத்தின் மேரு சிகரத்தின் நேர்மேலே இருக்கும் வானுலகத்திற்கு ஆறுமாதம் பகல், ஆறுமாதம் இரவு. உத்தராயணம் பகல். தக்ஷிணாயனம் இரவு. பகல் ஆரம்பம் தைமாதத்தில். மார்கழி மாதம் முழுவதும் விடியற்காலம்.

நம்மைவிட தூயமனதுடைய வானோர் அதிகாலையில் தெளிவுடன் ஈசனை வழிபடும்போது, "பூவுடன் சேர்ந்த நாறும் மணம் பெறும்," காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்," "அனுகூலக் காற்றடிக்கும் போதே படகை விடு" எனும் நியாயங்களின்படி குறைந்த பக்ஷம் வீட்டிற்கொருவராவது தெருவிலுள்ளோர் எல்லோரும் கூடி மார்கழி பஜனை ஊர்வல உத்ஸவத்தை தினம் தவறாமல் அதிகாலையில் நடத்துவோமாக!

" 𑌮𑌾𑌸𑌾𑌨𑌾𑌂 𑌮𑌾𑌰𑍍𑌗𑌶𑍀𑌰𑍍𑌷𑍋𑌽𑌹𑌮𑍍 "

("மாஸானாம் மார்கசீர்ஷோऽஸ்மி ")

எனமொழிந்த பார்த்தஸாரதியான கண்ணன் புகழை வீடுதோறும், வீதிதோறும் ஊர்தோறும், நாடு முழுவதும் இசைப்போமாக !!

---

**அறிவிப்பு.**

பாவைப் புஸ்தகங்களை விரும்பும் பஜனை சங்கங்கள், பள்ளிக்கூடங்கள் பின்கண்ட விலாஸத்திற்கு எழுதி இலவசமாகப் பெற்றுக்கொள்ளலாம்.

**காரியதரிசி, திருப்பாவை-திருவெம்பாவைக் குழு,**
**19, பெரியகடைத்தெரு, மாயூரம்.**

ஸ்ரீ மீனாக்ஷி பிரஸ், கடவாசல்.—போன் நெ. 287.